KALKI 25.8.96
ரூ. 3.00

# கல்கி

கருணாநிதியின்
100 நாள்
ஆட்சி



— சொக்கர்
விமர்சிக்கிறார்

மயக்கத்தில்
கறக்கும்
மாடுகள்...
- ஒரு மாபெரும்
கொடுமை!

"எதையும் நான்
மறக்கலையே..!"
-அஜித்

# பொன்னை விரும்பும் பூமியிலே, ஈஸ்வர் பண்ணை வீட்டை ஏன் பலரும் விரும்புகின்றனர்?



மதுரைக்கு மிக அருகில் சுமார் 5000 ஏக்கரில் ஈஸ்வர் ஓர் எழில் கொஞ்சும் சோலையை உருவாக்கி வருகிறது.

இந்த சோலையில் 10,000 ச.அடி நிலமும், வளம் பெருக்கும் மா, பலா, தேக்கு மற்றும் அதிக லாபம் ஈட்டும் காய்கறிகளும் பழங்களும் பயிரிட்டு, 20 ஆண்டுகளுக்கு பராமரிக்கப்படும்.

ஈஸ்வரின் நிர்வாக திறன், வேளாண் நிபுணர்களின் உதவி, மிக உயரிய வேளாண் தொழில் நுட்பம் ஆகியவை இந்த சோலையை காப்பியங்களில் காணும் உதாரணங்களுக்கு ஈடாக அமைக்கும்.

இங்கே குயில்கள் பாடும், இன்ப இளந்தென்றல் உங்களை காதலோடு அரவணைக்கும், பல பசுமையான மரங்கள் கவிதை பாட வைக்கும், இத்தகைய சோலையில் ஒரு பண்ணை வீடு அமைத்து உங்கள் மகிழ்ச்சியையும், முதலீட்டையும் பெருக்குங்கள்.

## ஈஸ்வர்-இன் பொன் விளையும் திட்டங்கள்:

| உங்கள் முதலீடு | நீங்கள் பெறுவது | 20 ஆண்டுகளில் மதிப்பு |
| --- | --- | --- |
| ரூ.25,000/- அல்லது ரூ.250/- வீதம் 100 சுலப தவணைகள் | 10,000 ச.அடி நிலம்<br>24 தேக்கு மரங்கள்<br>2 ஒட்டு மா<br>2 வீரிய தென்னை<br>காய்கறி தோட்டம் | ரூ.10 லட்சம்<br>ரூ.24 லட்சம்<br>ரூ.50,000<br><br>ரூ.50,000 |

**20 ஆண்டுகளில் ரூ.35 லட்சம் மதிப்பு சொத்துக்கள்**

• 10,000 ச.அடி நிலம் உடன் உங்கள் பெயரில் பதிவு செய்யப்படுகிறது. • அற்புத தொழில் நுட்ப விந்தை. • சிறந்த நீர் வளம், மண் வளம், பயிர் வளம். • சில ஆண்டுகளில் உங்கள் நிலம் மதுரை நகரின் மையமாகி விடும். • பண்ணை வீடுகளும் கட்டிக்கொள்ளலாம்.

**ரூ.100/-வீதம் 15 மாதங்கள் செலுத்தி லட்சம் பெறும் திட்டங்களும் உள்ளன.**



ESWAR GROW-TEK LTD




287, West Masi Street, Madurai - 625 001.
Ph: 540843, 540305. Fax: 0452 - 540305. Telex: 0445 - 478 AGRI-IN.

***பசுமை வளம் நிறைந்த இந்தியாவை உருவாக்குவோம்.***

எங்கள் கம்பெனி (ஈஸ்வர்), சென்னையை சார்ந்த ஈஸ்வரி குருப் ஆப் கம்பெனிகளுக்கு எந்த விதத்திலும் தொடர்பு இல்லையென்று தெரிவித்துக் கொள்கிறோம்.

FIN-HANS R K SWAMY/BBDO




"எனக்கு யாராவது மெடல் குடுப்பாங்களா இஷ்டா? தமிழ்ல டக்கர் படங்கள் வர்றதுக்கு சூப்பர் ஐடியாக்கள் வெச்சிருக்கேன்" என்றான் தண்டபாணி.

"மெடல்தானே? குடுத்துட்டாப் போவுது. முதல்ல நீ விஷயத்தைச் சொல்லு" என்றேன் கறாராக.

''வருஷத்துக்கு எழுவத்தஞ்சு படங்களுக்கு கவர்மெண்ட்டுல மானியம் தராங்களே, அதுல ஒரு படமானா உருப்படியா இருக்குதுங்கறே?''

"வயத்தெரிச்சலைக் கிளப்பாதே. இந்த வருஷம் மானியம் பெற செலக்ட் பண்ணியிருக்கற படங்களோட லிஸ்டைப் பார்த்தால், ஒண்ணானா ஒரு வாரத்துக்கு மேல ஓடினதாத் தெரியலை. அத்தனையும் சொத்தை."

''அதான். அதேதான் சொல்ல வரேன். படத்துக்கு அஞ்சு லட்சம்னு எழுவத்தஞ்சு படம்னா என்ன ஆவுது? மூணே முக்கா கோடி! யார் வூட்டுச் சொத்து? அத்தனை பெரிய தொகையை தண்டத்துக்கு, தேறாத படங்களுக்குக் குடுக்கறதைக் காட்டிலும் உருப்படியா ஒரு காரியம் செய்யலாம்!''

"அதென்ன?"

"இப்ப, ஃபிலிம் இன்ஸ்டிடியூட்ல படிக்கறவங்களுக்கு, கடைசி வருஷம் ஒரு பிராஜக்ட் படம் பண்ணணும்னு சட்டம் இருக்கு. ஏழாயிரமோ, எட்டாயிரமோ குடுத்து 'எடுறா படத்தை'ங்கறாங்க. எட்டாயிரத்தை வெச்சிட்டு, ஸ்டில் போட்டோதான் எடுக்க முடியும்னு பசங்க மூக்கால அழுவறாங்க. இதுல இன்னொரு கொடுமை என்னன்னா, அவங்களுக்குப் பாடமா காட்டற படங்களெல்லாம் சத்யஜித்ரே, மிருணாள் சென், அகிரா குரசேவான்னு வோர்ல்டு கிளாஸ் ஆசா

மிங்களோட படங்கள். ஆனா அவங்க புழங்கப் போறது? இதே கோடம்பாக்கத்துல. அதனால என்ன பண்றாங்க? உண்மையிலேயே நல்ல படம் எடுக்கணும்னு ஆசை இருந்தாலும் சூடா, மசாலாதான் எடுக்கறாங்க. அதைப் பார்த்துட்டு எந்த புரொட்யூசராவது சான்ஸ் தர மாட்டாங்களான்னு நப்பாசை.

"கவர்மெண்ட் ஒண்ணு பண்ணலாம். அனாமத்துக்கு மானியமா தூக்கிக்குடுக்கறதை விட்டுட்டு, இப்படி புராஜெக்ட் படம் பண்ற இன்ஸ்டிடியூட் பசங்களுக்கு ஆளுக்குப் பத்து லட்சம் தரலாம். என்ன... வருஷத்துக்கு பதினஞ்சு, இருவது படங்கதானே? அப்பவும் மிச்சம் கணிசமா இருக்கும். அந்த துட்டுல கிராமப் புறங்கள்ல, மொபசல் சைடுலெல்லாம் சின்னச் சின்னதா ஒரு இருநூறு பேர் உட்கார்ந்து பாக்கறாப்பல மினி தியேட்டர் கட்டி, அவங்க எடுக்கற நல்ல படங்களை கவர்மெண்ட்டே வாங்கி, ரிலீஸ் பண்ணலாம். சினிமாத் துறை செழிக்க இதைவிட உபயோகமா அரசாங்கத்துல வேற எதுவும் செய்ய முடியாது. கூடவே, அத்தனை பசங்களோட ஆசீர்வாதமும் கிடைக்கும்."

நான் அரண்டு போனேன். தண்டபாணியை முறைத்துப் பார்த்து, "தண்டபாணி, உண்மையைச் சொல்லு... இது உன் ஐடியா தானா?" என்றேன்.

"ஏன் சந்தேகம்?"

"இல்லை, உருப்படியா இருக்கேன்னுதான்."

"விட மாட்டியே? எடிட்டர் லெனின் சொன்னார்."

"அப்படிப் போடு. ஏதுடா திடீர்னு உனக்கு இப்படியெல்லாம் ஞானம் பிறந்துடுச்சேன்னு நினைச்சேன்."

"யார் யாருக்கோ ஞானம் வர சொல்ல, எனக்கு மட்டும் வராமலா போயிடும்? என்னிக்கானா வந்துடும்."

"வேற யாருக்கு ஞானம் வந்தது ரீஸன்ட்டா?"

"போன வாரம் கோவா போயிருந்தேன் கிஷ்டா! ஒரு தெலுங்குப் படத்துக்காக. அங்க வேற ஒரு ஹிந்திப்பட ஷூட்டிங்குக்காக பூஜா பட் வந்திருந்தாங்க."

"கல்லூரி வாசல்ல நடிச்சிருந்தாங்களே, அந்தம்மாவா?"

"நீ அம்மான்னு சொன்னது அவங்க காதுல விழுந்தா உன்னை கைமா போட்டுடுவாங்க. வேணும்னா அக்கான்னு சொல்லு. பெட்டர், தங்கச்சி!"

"சரி விடு. விஷயத்துக்கு வா."

"நான் கிட்டத்தட்ட ஒரு டஜன் ஆம்பளைங்களுக்கு மேல பழகிட்டேன். யாரோடவும் ஒரு ஆத்மார்த்தமான பிணைப்பே வரலை. ஆண்கள்கிட்ட ஒரு மாதிரி அடக்கி ஆள்ற டெம்பரமெண்ட்தான் இருக்குது. நமக்கு அதெல்லாம் சரிப்படாது. பேசாம ஆயுசு முழுக்கக் கல்யாணமே பண்ணிக்காம இருந்துடலாமான்னு யோசிக்கறேன். அப்படீன்னாங்க."

"அடடா, இதைப் போன வாரம் சொல்லலாம்



• விஸ்வநாத்: சரவணன், மோகினி



''இந்தக் கலர் டீவியை மணமகனுக்கும், அதன் ரிமோட் கண்ட்ரோலை மணமகளுக்கும் பரிசாக அளிக்கிறேன்.''

– அ. ஷண்முகசுந்தரம்

போயிட்டியே தண்டபாணி. நம்ம கவர் ஸ்டோரிக்கு கொஞ்சம் ஹ்யூமர் சேர்த்தாப்பல இருந்திருக்கும்.''

''விஷயம் தெரியுமா? இன்னிக்கு ஃபீல்டுல ஹ்யூமரெல்லம் போணியாவுற விஷயமில்லை; பக்திதான் காரண்டியா கைகொடுக்கும்னு அத்தனை பேரும் ஒரு முடிவுக்கு வந்திருக்காங்க.''

''நல்லது நடந்தா சரி.''

''முழுக்கக் கேளு. ஏ.பி. நாகராஜன் மாதிரியும் இல்லாம, ராமநாராயணன் மாதிரியும் இல்லாம, பக்திப் படங்கள் எடுக்க இன்னொரு நூதன உபாயம் கண்டுபிடிச்சிருக்காங்க.''

''என்னவாம்?''

''நேத்திக்கு ஒரு பூஜை போயிருந்தேன் வாத்யாரே! 'தேவி'ன்னு கோடி ராமகிருஷ்ணா படம். கம்ப்யூட்டர் கிராஃபிக்ஸ், ஹாங்காங்லேருந்து ஸ்பெஷல் எஃபெக்டு, அனிமேஷன் அது இதுன்னு பேசிட்டிருந்தாங்க. சர்தான், ஷங்கர் இன்வால்வ் ஆறார் போலன்னு நினைச்சேன் முதல்ல. அப்பாலதான் தெரிந்தது, பக்திப் படத்தை அடுத்த நூற்றாண்டுக் கேத்தாப்பல தயாரிக்கிறாங்களாம்!''

''எப்படி?''

''ஒரு பாம்பு, பொண்ணா மாறிடுதாம். அதைப் பாம்புன்னு தெரியாம ஹீரோ லவ் பண்றான். இன்னொரு டிராக்குல ஒரு கரு நாகம் வில்லனா மாறிடுது. அது இவங்களுக்கு ரப்சர் குடுக்குது. எல்லாம் தேவியோட அருளால எப்படி நல்லபடியா முடியுதுங்கறதுதான் கதை.''

''தலைசுத்துது தண்டபாணி.''

''இந்த ஆள் மாறாட்ட சமாசாரமெல்லாம் கம்ப்யூட்டர் பாத்துக்குது. 'அம்மன்' ஹிட்டாச் சில்லை? அதனோட பாதிப்பு. இதே ரேஞ்சுல இன்னும் பதினாலு படம் ரெடியாயிட்டிருக்குன்னு தகவல்.''

''தேவி காப்பாத்தட்டும்!''

''தேவி அவங்களைக் காப்பாத்தட்டும். இப்ப மக்கள் காப்பாத்தியே ஆக வேண்டிய நிலைமைல ஒருத்தர் இருக்கார்.''

''ஐயோ, பாவம். நீ யாரைச் சொல்றே?''

''சரவணன்.''

''ஏவி.எம். சரவணனா? அவர் நல்லா இருக்காரே?''

''பார்த்தியா? உனக்கே மறந்து போச்சு. கடைசியா 'சூரியன் சந்திரன்'ல பார்த்திருப்பே.''

''ஓ அவரா. மன்னிச்சிரு தண்டபாணி. எனக்குக் கொஞ்சம் ஞாபகமறதி ஜாஸ்தி ஆயிடுச்சி. ஞாபகசக்தி மாத்திரை சாப்பிட ஆரம்பிச்சதுலேருந்து... நீ விஷயத்தைச் சொல்லு.''

''வரிசையா நாலஞ்சு படம் ஃபெயிலியர் ஆனதால சரவணன் பக்கம் கூடத் திரும்பலை, கோடம்பாக்கம்.''

''தெரியாதா இதெல்லாம்?''

''அதான் சொந்தப் படம் தொடங்கி, ஒரு வருஷமா சைலண்ட்டா எடுத்துட்டு வரார். விஸ்வநாத்.''

''நீ டீவி சீரியலை சொல்றியா?''

''ப்ச். இல்லைய்யா... இவரு படத்துக்கும் விஸ்வநாத்தான் டைட்டில். சம்பாரிச்ச அத்தனை காசையும் கொட்டி, செமை பிரும்மாண்டமா எடுத்திருக்கார். என்னங்கறே? கதை சமாசாரமெல்லாம் கூட அவரே.''

''போட்டோவுல, அவரோட ஒரு கையில மோகினி, தெரியுது. இன்னொரு கையில இருக்கறது வீணைதானே?''

''அப்படியா சொல்றே? நான் புல்புல் தாரான்னு நினைச்சேன்!''

- கிச்சா



''சார், வட்டியில்லாத லோன் கொடுத்திங்க. தவணை முறைல கட்ற மாதிரி லோன் கொடுத்திங்க, தள்ளுபடியோட லோன் கொடுத்திங்க... எல்லாம் சரி, திருப்பி கட்டத் தேவையில்லாத லோன் இருக்கா பாருங்க!''

- சக்தி. சரவணன்

அவர் பெயரைச் சொன்னாலே கல்லூரிப் பெண்கள் உணர்ச்சிவசப்படுகிறார்கள். ஆண்களுக்கு நிகராக, தியேட்டரில் அவரைக் கண்டதும் ஆராதிக்கிறார்கள். 'ஸோ ஸ்வீட்; ஸோ க்யூட்' என்று கொண்டாடுகிறார்கள்.

அஜித் –

தமது திடீர் தொடர் வெற்றிகளின் மூலம் கோடம்பாக்கத்தின் பல இளம் நடிகர்களின் தூக்கத்தைக் கெடுப்பவராகவும் ஆகி இருக்கிறார்.

சுமார் இரண்டு மணி நேரம் கல்கிக்கு அவர் அளித்த பிரத்யேகப் பேட்டி சற்று சூடும் காரமுமாகவே இருந்தது. அவரைப் பற்றிய குற்றச்சாட்டுக்கள், கிசுகிசுக்கள் உட்பட கேட்ட அத்தனை கேள்விகளுக்கும் தயக்கமின்றி பதில் சொன்னார் அஜித். பேட்டியிலிருந்து :

# ஜலைக் ஹீரோ... அதிலென்ன தப்பு?

**"அஜித், உங்களை விட, உங்க மோட்டார் சைக்கிள் இன்னிக்கு ரொம்பப் பாப்புலர். பத்திரிகைகள்ல சின்னதா ஒரு பாக்ஸ் சைஸ் இடம் கிடைச்சா, நீங்க சோழவரம் ரேஸ்ல கலந்துக்கிட்டதையும் ஷூட்டிங்குக்கு பைக்ல வர்றதைப் பத்தியும்தான் எழுதறாங்க...!"**

"ஆமா! சின்ன வயசிலிருந்தே எனக்கு மோட்டார் சைக்கிள் மேல ஒரு இனம்புரியாத காதல். நான் முதல் முதல்ல வேலைக்கு சேர்ந்ததே 'என்ஃபீல்டு' கம்பெனியிலதான்.

எங்கப்பா, விஜய்மல்லய்யாவோட கம்பெனி ஒண்ணுலதான் வேலை பார்த்துட்டு இருந்தார். அவங்க ஒரு 'டீம்' வெச்சிருந்தாங்க. ரேஸ் டீம். சோழவரம் ரேஸ்லயெல்லாம் கலந்துப்பாங்க. ஆழ்வார்பேட்டையில ஒரு வீடு நிறைய ரேஸ் கார்களா இருக்கும். அங்கதான் ரெடி பண்ணுவாங்க. நான் அங்க போய் நின்னு அதையெல்லாம் வேடிக்கை பார்த்துட்டு இருப்பேன். மூணாங்கிளாஸ் படிக்கறச்சவே ஆசை வந்துடுச்சி. என்னிக்கானா ஒருநாள் ரேஸ்ல கலந்துக்கணும்னு. அந்த ஆசையும் நிறைவேறிடுச்சி. இப்ப நடிகனா ஆயிட்டப்புறம் அதுக்கெல்லாம் சான்ஸ் இல்லாமப் போயிடுதே? அதனாலதான் ஷூட்டிங்குக்காவது பைக்ல போவமேன்னு போறேன்."

**"உங்க வீட்டுல வேற யாராவது ரேஸ்ல கலந்துக்கறாங்களா?"**

"நீங்க வேற. நான் ஒருத்தன்தான் இப்படி. பத்தாங்கிளாஸுக்கு மேல படிப்பு வரலை. அதுவரைக்குமே கூட எப்பவும் எனக்கு எக்ஸ்ட்ரா கரிகுலர் ஆக்டிவிடீஸ்ல இருக்கற ஆர்வம் படிப்பு விஷயத்துல இருந்ததில்லை. ஆனா, என் அண்ணனோ, தம்பியோ அப்படியில்லை. அவங்க பெரிய படிப்பாளிகள்! அண்ணன் நியூயார்க்குல ஒரு நிதி நிறுவனத்துல காஸ்ட் அனலிஸ்டா இருக்கார். தம்பி, ஐஐடில பி.டெக் முடிச்சிட்டு, எம்.எஸ். முடிச்சுட்டு பி.எச்டி பண்ணிட்டிருக்கான். நான்தான் பைக் ரேஸ், மாடலிங் அப்படி இப்படின்னு..." (சிரிக்கிறார்)

**"ஓ, சினிமாவுக்கு முன்னாடி மாடலிங் பண்ணியிருக்கீங்களா?"**

"ஆமா. அது கூட சீரியஸா இல்லை. நான் என்ஃபீல்டுல இருந்து வெளிய வந்து ஒரு எக்ஸ்போர்ட் கம்பெனி வேலையில சேர்ந்தேன். ஆடை ஏற்றுமதி நிறுவனம் அது. எப்பவும் டென்ஷனோட வாரம் முழுக்க வேலை பார்க்கணும். As bad as cinema! அப்பத்தான் என் ஃப்ரெண்டு ஒருத்தர் விளம்பரப் படங்களுக்கு ஆட்கள் ஏற்பாடு பண்ணித் தர்ற 'மாடல் கோவாடினேட்டரா' இருந்தார். 'உன் போட்டோ குடு. நீ ஏன் மாடலிங் பண்ணக் கூடாது?'ன்னு கேட்டார். இந்த வேலை டென்ஷன்லேருந்து அப்பப்பவாவது ஒரு சின்ன டைவர்ஷன் கிடைக்குமேன்னு ஃபோட்டோ

குடுத்தேன். அப்புறம்... பி.சி. ஸ்ரீராம், சுரேஷ் மேனன், இவங்கள்லாம் தயாரிச்ச Ad filmsகளிலே வந்திருக்கேன். அப்ப கூட சினிமா ஆசையெல்லாம் பெரிசா கிடையாது. அதுக்காக முயற்சி எதுவும் பண்ணலை."

**"பின்ன எப்படி வந்தீங்க?"**

"சொன்னேனில்லை? அந்த எக்ஸ்போர்ட் கம்பெனி வேலை... வெறுத்துப் போய் அதை விட்டுட்டு சொந்தமா நானே ஒரு பிஸினஸ் ஆரம்பிச்சேன். இதே டெக்ஸ்டைல் துறைதான். நூல் சப்ளை பண்ற பிஸினஸ். ஆனா சரியான அனுபவம் இல்லாததனால பயங்கர நஷ்டமாயிடுச்சி. என்ன பண்றதுன்னு தெரியலை. எப்படியாவது சம்பாதிக்கணும்னு ஒரு வேகம். அதனாலதான் – நடிக்க வாய்ப்பு வந்தபோது சந்தோஷமா ஒத்துக்கிட்டேன். முதல் படம் 'பிரேம புஸ்தகம்' தெலுங்குப் படம். என்னோட ஃபர்ஸ்ட் அண்ட் லாஸ்ட் தெலுங்குப் படமும் அதுதான். அதுக்கப்புறம் அமராவதி. அதுதான் முதல் தமிழ்ப்படம். அந்தப் படம் முடிச்சதும் என்ன ஆச்சன்னா, ஒரு பைக் ரேஸுக்காக பிராக்டிஸ் பண்ணிட்டிருக்கறப்ப, ஆக்ஸிடெண்ட் ஆயிடுச்சு. முதுகுப் பக்கம் சரியான அடி. எலும்பெல்லாம் கழண்டு, ஒண்ணரை வருஷம் படுக்கையை விட்டு எழுந்திருக்க முடியாம ஆயிடுச்சி. 'சரி, நாம அவ்வளவுதான்'னு ஒரு மாதிரி பயம் வந்துடுச்சி. இருந்தாலும் அந்த சமயத்துலயும் 'பாசமலர்கள்' படத்துல ஒண்ணு, ரெண்டு சீன் – சின்ன ரோல் நடிக்கக் கூப்பிட்டாங்க. நடிச்சிக் குடுத்தேன். நைன்ட்டி ஃபோர்ல 'பவித்ரா' சான்ஸ் கிடைச்சதுதான் எனக்கு ரீ-என்ட்ரி."

**"ஆனா 'பவித்ரா' ஃபெயிலியர் படம் இல்லையா?"**

"அஃப்கோர்ஸ் கமர்ஷியலா அது ஃபெயிலியர் படம்தான். ஆனா அது ஒரு நல்ல படம் இல்லைன்னு யாரும் சொல்ல மாட்டாங்க. இன்ஃபாக்ட், வஸந்த் அவரோட 'ஆசை' படத்துல என்னைப் போட்டதுக்குக் காரணமே 'பவித்ரா'தான். அந்த வகையில டைரக்டர் கே. சுபாஷ் எனக்குக் கடவுள் மாதிரி. 'பவித்ரா' முடிஞ்சதுமே எனக்கு 'ஆசை' கிடைச்சிடுச்சன்னாலும் அந்தப் படம் ஷூட்டிங் ஒரு ஆறு மாசம் தள்ளிப் போச்சு. காரணம் ப்ரொட்யூசர் மணிரத்னம், அவரோட 'பம்பாய்' முதல்ல வரணும்னு பிளான் போட்டு ஒர்க் பண்ணிட்டிருந்ததால. அந்த ஆறு மாச 'கேப்'ல 'ராஜாவின் பார்வையிலே' முடிச்சேன்."

**"அதுவும் ஃப்ளாப் படம்!"**

"ஆமா. நான்தான் சொல்றேனே... சம்பாதிக்கணும். சம்பாதிக்கணும். அவ்ளோதான். அதான் கிடைச்ச எந்தப் படத்தையும் மறுக்கலை."

**"தொடர்ந்து இப்படி நாலு 'ஃப்ளாப்' குடுத்தா ஃபீல்ட் அவுட் பண்ணிடுவாங்களோன்னு பயப்படலையா நீங்க?"**

"நெவர். எதைப் பத்தியும் கவலைப்படலை. இன்ஃபாக்ட் என்கிட்ட கால்ஷீட் கேட்டு வர்றவங்க கிட்டே டேட் பிரச்னை வராம பார்த்துக்கங்கன்னு சொல்றது தவிர, படம் பத்தியோ, கூட நடிக்கிறவங்க பத்தியோ நான்

வஸந்த் அவரோட 'ஆசை' படத்துல என்னைப் போட்டதுக்குக் காரணமே 'பவித்ரா'தான். அந்த வகையில டைரக்டர் கே. சுபாஷ் எனக்குக் கடவுள் மாதிரி.

எதுக்காக? எதுக்காக நான் ரஜினி மாதிரி ஆகணும்? தவிர அதென்ன அத்தனை சுலபமா?

கேட்டதே இல்லை. எனக்கு என்ன வேணும்? தொடர்ந்து வேலை செஞ்சிட்டிருக்கணும். சம்பாதிக்கணும். அவ்ளோதான். ஹீரோவாத்தான் நடிப்பேன் அப்படீங்கறதெல்லாம் கூட இல்லை. நிறைய படங்கள்ல ரெண்டு ஹீரோக்கள்ல ஒருத்தனா நடிச்சிருக்கேன். நாளைக்கே ஹீரோவா வேணாம்;

மூணாங்கிளாஸ் படிக்கறச்சவே ஆசை வந்துடுச்சி. என்னிக்கானா ஒருநாள் ரேஸ்ல கலந்துக்கணும்னு.

கேரக்டர் ரோல் பண்ணுங்க; கெஸ்ட் ரோல பண்ணுங்கன்னு கேட்டாக் கூட மறுக்க மாட்டேன். இதுல எனக்குப் பெரிய ஆம்பிஷனெல்லாம் கிடையாது."

**"கதை என்னன்னு கூட கேக்க மாட்டீங்களா?"**

"இதுவரைக்கும் கேட்டதில்லை. பவித்ரா ஃபெயிலியர் ஆகி, அப்புறமும் 'ஆசை' வாய்ப்பு கிடைச்சபோது சந்தோஷமாகவும் பயமாகவும் இருந்தது. இது நல்லா வரணுமேன்னு பயம். அப்பக் கூட 'என்ன சார் கதை?'ன்னு நான் வசந்த்கிட்ட கேக்கலை. காரணம்? அவரும் ஒன்னரை, ரெண்டு வருஷமா படம் இல்லாம கஷ்டப்பட்டிருக்கார். 'கேளடி கண்மணி'ன்னு ஒரு சூப்பர் ஹிட் படம் குடுத்தவருக்கு, 'நீ பாதி நான் பாதி' ஃபிளாப்! ஸோ, அடுத்தது இந்தப் படம். எப்படியும் ஹிட் ஆகணும்னு அவருக்கும் ஒரு வெறி இருக்கும். என்னை விட அவரோட அக்கறையும் கவலையும் பெரிசுன்னு தோணிச்சு. அதனால அவர்கிட்டேயும் கதை கேக்கலை. அப்புறமும் வான்மதி, கல்லூரி வாசல், காதல் கோட்டை... எந்தப் படத்துக்கும் முன்னால கதை கேட்டதே இல்லை."

**"நிறைய டபுள் ஹீரோ சப்ஜெக்ட்ஸ் பண்றீங்க. அதுக்கான ஆரோக்யமான ட்ரெண்ட் நம்ம ஃபீல்டுல இல்லைன்னு ரொம்பப் பெரிய நடிகர்களே சொல்றாங்க. உங்களுக்கு எப்படி ஒத்து வருது?"**

"ரொம்ப சிம்பிள். நான், எனக்குக் குடுக்கற ரோலை ஒழுங்கா பண்ணிட்டுப் போயிடுவேன். ஷூட்டிங் ஸ்பாட்ல ஒரு பிரச்னையும் வராது.

நான் அடுத்தவன் பணத்துக்கு அலையலை; அடுத்தவன் பேருக்கு அலையலை. அடுத்தவன் பெண்டாட்டிக்கு அலையலை...

பிரசாந்தோட நடிச்சிருக்கேன். விக்ரமோட நடிச்சிருக்கேன். இப்பக் கூட வஸந்த் சாரோட 'நேருக்கு நேர்' படம் டபுள் ஹீரோ சப்ஜெக்ட் தான். விஜயோட நடிக்கறேன். சத்யராஜ் கூட நடிக்கவும் ஒரு வாய்ப்பு வந்திருக்கு. பேஸிக் விஷயம் என்னன்னா, ஈகோ கூடாது. ஸ்போர்டிவா இருக்கணும். அவ்ளோதான்."

**"டபுள் ஹீரோ சப்ஜெக்ட் படங்கள்ல கூட உங்களுக்கு முக்கியத்துவம் வர்றா மாதிரி ஸ்கிரிப்ட் அமைஞ்சுட்டதால இப்படிப் பேசறீங்கன்னு நினைக்கறேன்."**

"இருக்கலாம். எனக்குத் தெரியலை. ஆனா ஒண்ணு மட்டும் உண்மை. 'எனக்கு இம்பார்ட்டன்ஸ் குடுத்து ஸ்கிரிப்ட் எழுதுங்க'ன்னு நான் யார்கிட்டயும் கேட்க மாட்டேன். சத்தியமா இதுவரைக்கும் கேட்டதில்லை. என்னைக் கேட்டா, நான் மட்டுமில்லை. இன்னும் கொஞ்ச நாள்ல எல்லா ஹீரோக்களுமே இந்த மாதிரி காம்ப்ரமைஸுக்கெல்லாம் ஒத்துக்க வேண்டிய சூழ்நிலை வரும்னு நினைக்கறேன்.

ஏன்னா, தமிழ் சினிமா, கொஞ்சம் கொஞ்சமா ஹிந்தி ஃபீல்டு மாதிரியே ஆயிட்டிருக்கு. காஸ்ட் ஆஃப் ப்ரொடக்ஷன் ஏறிட்டே போறது. ஒருத்தரை நம்பிப் படம் எடுக்கற சூழ் நிலையெல்லாம் இனிமே இருக்குமான்றது சந் தேகம். எல்லாரும் ரஜினியோ கமலோ இல் லையே? இப்ப நான் வந்து விஜய் கூட சேர்ந்து ஒரு படம் பண்றேன்னு வெச்சிக்குங்க. என் ரசிகர்கள் எனக்காகப் படத்தை மூணு நாலு வாரம் ஓட்டறாங்கன்னு வெச்சிக்குங்க. விஜ யோட ரசிகர்கள், அவருக்காக ஒரு நாலு வாரம் ஓட்டுவாங்க. இப்ப டோட்டலா என்ன ஆறது? படம் ஹிட் ஆக வாய்ப்பு அதிகமாவுது. இதான் இன்றைய நிலை. நான் பிஸினஸ் ரீதி யில மட்டும் பேசறேன். இன்ஃபாக்ட், மக்க ளுக்கே இந்த மாற்றம் பிடிச்சிருக்கு. நல்ல வேளை என் படங்கள்லேருந்து இதுவரைக்கும் 'இவன் இந்த மாதிரிதான்'னு ஒரு இமேஜ் இது வரைக்கும் வரலை."

**"உங்களுக்கு அதுல விருப்பமில்லையா?"**

"நிச்சயமா இல்லை. எதுக்கு இமேஜ்? இயல்பா இருந்துட்டுப் போறேன். வான்மதி யிலே ஆக்ஷன் நிறைய பண்ண வேண்டியிருந் தது. இப்ப காதல் கோட்டைல ரொம்ப சாஃப்ட். இது போதும்! எந்த மாதிரி கேரக்டருக்கும் என் னால முடியும்னு ஜனங்க நினைச்சா அது போதும். பர்டிகுலரா ஒரு இமேஜ் விழாம இருக் கணும்னுதான் விரும்பறேன்."

**"அது சரி. ஆனா, 'டைரக்டர்'ஸ் ஆர் டிஸ்ட்'னு வேற ஒரு இமேஜ் விழும் போல இருக்கே? நல்ல டைரக்டர்களோட படங் கள்ல மட்டும் நீங்க பிரமாதமா தெரியறதும், அவங்களோட படங்கள்லயே மறுபடி மறுபடி நடிக்கறதும்..."**

"டைரக்டர்ஸ் ஆர்டிஸ்ட்னு சொல்றதை நான் முழுக்க முழுக்க ஒத்துக்க மாட்டேன். அஃப்கோர்ஸ், ஆசை, காதல் கோட்டைல எல் லாம் என் பர்ஃபாமென்ஸ் நல்லா இருக் குன்னா அதுக்கு டைரக்டர்களோட உழைப்பு நிச்சயம் ஒரு முக்கியக் காரணம்தான். ஆனா, என் கான்ட்ரிப்யூஷனையும் விட்டுடக்கூடாது இல்லையா? இன்னொண்ணு. நான் ஏன் திரும் பவும் வஸந்த், கே. சுபாஷ் மாதிரி டைரக்டர் கள் படங்கள்ல ஒர்க் பண்றேன்னு கேக்கறீங்க. என்னை வெச்சு ஏற்கெனவே படம் எடுத்தவங் களோட மறுபடி மறுபடி ஒர்க் பண்ணறச்சே, அது சுலபமா இருக்கு. என்கிட்ட எப்படி வேலை வாங்கறதுன்னு அவங்களுக்குத் தெரிஞ் சிருக்கு. அவங்களைப் பத்தியும் எனக்குத் தெரி யும் அப்படீங்கறதால ஒரு மியூச்சுவல் அண்டர் ஸ்டாண்டிங் வந்துடுது. அதனாலதான்."

**"ஓகே! கொஞ்சம் பர்ஸனலா போக லாமா? உங்களைப் பத்தி ஏன் அடிக்கடி கிசு கிசு வருது? குறிப்பா ஹீராவுடன் இணைத்து..."**

"வெல். முதல்ல ஒரு விஷயம் சொல்றேன். என்னைப் பத்தி, கண்டது, கேட்டது, காற்றில் வந்ததுன்னு பத்திரிகைகள்ல எழுதறாங்களே தவிர நேரடியா என்கிட்ட வந்து ஏன் கேக்க மாட்டேங்கறாங்க? இப்ப நீங்க நேரடியா கேக்க றீங்க. நான் தெளிவா சொல்லிடறேன். I like Heera very much. போதுமா? அவரோட நான் ஒண்ணா வெளில போறேன். அவரோட ஒண்ணா உட் கார்ந்து லன்ச் சாப்பிடறேன். அவரோட பேசிட்டே இருக்கேன். ஏன்? எனக்கு அவரை ரொம்பப் பிடிச்சிருக்கு. அவருக்கும் என்னைப் பிடிச்சிருக்கு. இது என்ன தப்பு? எந்த வகையில தப்பு? நாளைக்கே நாங்க கல்யாணம் பண்ணிக் கலாம். அல்லது கடைசி வரை நண்பர்களாகவே கூட இருந்துடலாம்! யார் கண்டது? எதுவும் நடக்கலாம்!"

**"இந்த விஷயம் உங்க பெற்றோருக்குத் தெரியுமா? அவங்க என்ன நினைக்கறாங்க?"**

"ஸீ. என் சம்பந்தப்பட்ட எந்த விஷயத் தையும் நான் யார்கிட்டேயும் எப்பவும் மறைக் கறதில்லை. நான் சிகரெட் பிடிக்கறேன். வெளிப்படையாத்தான் பிடிக்கறேன். யார்கிட் டேயும் மறைக்கறதில்லை. அதுபோலத்தான் இதுவும். மூணு விஷயம் - நான் அடுத்தவன் பணத்துக்கு அலையலை; அடுத்தவன் பேருக்கு அலையலை; அடுத்தவன் பெண்டாட்டிக்கு அலையலை. ஒரு யோக்கியனுக்கு இந்த மூணு குணம் இருந்தாப் போதும்னு நினைக்கறேன்."

**"நீங்க இப்படி பேசறது பத்தி உங்க ரசிகர் கள் எப்படி ரியாக்ட் பண்ணுவாங்கன்னு யோசிச்சிருக்கீங்களா?"**

"என் தொழில், நடிப்பு. அதில் நான் குறை வைக்கிறேனா? ரசிகர்கள் தியேட்டருக்கு வந் தால் நான் அவர்களை ஏமாத்தறதில்லை. தட்ஸ் ஆல்! ஒவ்வொருத்தரோட பர்சனல் லைஃப்ல எதுக்காக ஆர்வம் காட்டணும்? ஒவ்வொரு மனுஷனுக்கும் ரெண்டு முகம் இருக்கும். நிச்ச யமா இருக்கும். அதுல ஒண்ணு ஒரிஜினலாக வும் இன்னொண்ணு ஒப்பனையோடும் இருக் கும். பெரும்பாலும் ஒரிஜினல் முகத்தை யாரும் காட்ட விரும்பறதில்லை."

**"இமேஜ் பத்திக் கவலைப்படாம இருக் கறதும் இப்படி வெளிப்படையா பேசறதும் - இதன் மூலமாவே ஒரு 'இமேஜ்' க்ரியேட் பண்றாப்பல தெரியுது. ரஜினி மாதிரி ஒரு இமேஜ் வளர்த்துக்க விரும்பறீங்களா? உண் மையைச் சொல்லுங்க?"**

"எதுக்காக? எதுக்காக நான் ரஜினி மாதிரி ஆகணும்? தவிர அதென்ன அத்தனை சுல பமா? அவரோட 'சூப்பர் ஸ்டார்' அந்தஸ்தைத் தான் எல்லாரும் பாக்கறீங்க. அதை அடைய அவர் என்னென்ன கஷ்டப்பட்டிருப்பார்னு யாரும் யோசிக்கறதில்லை! நான், யார் மாதிரி யும் ஆக விரும்பலை. அஜித்குமாராவே இருக்க விரும்பறேன். அதுவே எனக்குப் போதும்!"

பேட்டி : **ஔரங்கசீப்**

ஏற்பாடு : **சந்திரமௌலி**

அட்டை வண்ணப்படம், படங்கள் : **யோகா**



# புயலில் பாடிய 'ஓ வெண்ணிலா'!



**பாடகர் உன்னிகிருஷ்ணனை அவரது தீவிர ரசிகை (கோத்தாரி ஓரியண்ட் ஃபைனான்ஸில் பணிபுரிகிற) மீராஸ்ரீதர் இங்கே பேட்டி காண்கிறார்:**

மீரா: வணக்கம் சார். இவ்வோ நல்லா பாடறீங்களே. நீங்க யார்கிட்ட கத்துக்கிட்டீங்க?

**உன்னிகிருஷ்ணன்:** முதல்ல வி.எல். சேஷாத்ரிகிட்ட தான் பாட்டு கத்துக்க சேர்ந்தேன். அப்ப எனக்குப் பன்னெண்டு வயசு. அப்புறம் டாக்டர் எஸ். ராமநாதன். சாவித்திரி சத்யமூர்த்தி, கல்கத்தா கிருஷ்ணமூர்த்தி- இவர்களும் என் குரு.

மீரா: பன்னெண்டு வயசுல கத்துக்க ஆரம்பிச்சீங்களா... யார் உங்களுக்கு இன்ஸ்பிரேஷன்?

**உன்னி:** சந்தேகமில்லாம ஜேசுதாஸ்தான். சின்ன வயசுல அவரை மாதிரியே பாடிப் பார்ப்பேன். அவர் பாடினதைத் தான் திரும்பத்திரும்ப கேட்டுட்டு இருப்பேன். அப்புறம் YACM (Youth association for classical music) நண்பர்களோட பழக ஆரம்பிச்சப்புறம்தான்- விஜய்சிவா, சஞ்சய்சுப்ரமணியம் மாதிரி என் ஃப்ரெண்ட்ஸ் எல்லாம் தான் எனக்கு மத்த பாடகர்களையும் அறிமுகப்படுத்தி, கேக்க வெச்சாங்க. ராம்நாட்கிருஷ்ணன், ஜி.என்.பி., செம்மங்குடி-இவங்க டேப்பையெல்லாம் இருபது வயசுக்கப்புறம்தான் முதல் தடவையாகக் கேட்டேன்னா பார்த்துக்கங்களேன்!

மீரா: ரொம்ப லேட்டாத்தான் ஆரம்பிச்சதா சொல்றீங்க. எப்படி இவ்ளோ சீக்கிரம் பிரமாதமா வந்துட்டீங்க?

**உன்னி:** என்குரு எஸ்.ராமநாதனோட ஆசீர்வாதம் தான் காரணம்னு நினைக்கறேன். என் வளர்ச்சிக்குக் காரணம், எனக்கு சொல்லித் தரவங்களோட உழைப்பு, அக்கறை,

ஈடுபாடுன்னு சொல்லலாம்.

*மீரா:* உங்க பாட்டு எல்லாத் தரப்பு ரசிகர்களுக்கும் பிடிச்சிருக்கு. உங்க ஸ்டைல், யாரா லயும் ரசிக்கும்படியா இருக்கு. நீங்க யாருக்காவது பாட்டு சொல்லிக் குடுக்கறீங்களா?

**உன்னி:** ஐயோ, அதுக்குள்ளியா! நானே இன்னும் கத்துக்கிட்டிருக்கேன். அதுக்குள்ள எப்படி சொல்லிக் குடுக்கறது? தவிர, எனக்கு அதுக்கு டயமும் இப்ப கிடையாது. கத்துக்கறது, கச்சேரி, ரெக்கார்டிங்னு மாத்தி, மாத்தி சரியா இருக்கு. ரிடையர் ஆனப்புறம் தான் முடியும்னு நினைக்கறேன். (சிரிப்பு)

*மீரா:* கொஞ்சநாளா சினிமால நிறையப் பாடறீங்க? பொதுவா, சினிமாவில பாடினால் மேடைக்கச்சேரி பண்றது கஷ்டம், கூடாதுன்னு ஒரு சாரார் சொல்லுவாங்க...

**உன்னி:** எனக்கு அப்படியொண்ணும் சிரமம் தெரியலை. சொல்லப்போனா இது கொஞ்சம் உதவியாகவும் இருக்கு. உதாரணமா, 'மைக்'கை எப்படி நமக்கு சாதகமா யூஸ் பண்ணிக்கறதுங்கறது எனக்கு சினிமாப் பாட்டு ரெக்கார்டிங் போக ஆரம்பிச்சதுக்கப்புறம் தான் தெரிஞ்சது. அப்புறம் டயம் கான்ஷியஸ்னஸ். சுருக்கமாகவும் அழகாகவும் பாடறது. சினிமாவுல பாடறதுனாலதான் அப்படீங்கறதில்லை. அது எனக்கு உதவறது. உபயோகமாகவும் இருக்கு. கஷ்டமாக ஒண்ணும் இல்லை.

*மீரா:* ரகுமான் மியூஸிக்ல மட்டும் நிறைய பாடறீங்க. மத்தவங்களோட ஏன் அதிகமா இல்லை?

**உன்னி:** உங்க ஸ்டேட்மென்ட்டே தப்பு. நான் நிறைய பாடி இருக்கறது தேவா மியூஸிக்லதான். அவரோட ஒவ்வொரு படத்திலேயும் ஒரு பாட்டாவது என்னைப் பாட வெச்சுடறார். ரகுமான் கம்போஸ் பண்ண பாடல்கள்– நான்பாடி– எல்லாம் ஹிட் ஆயிட்டதால இப்படிக் கேக்கறீங்கன்னு நினைக்கறேன்.

*மீரா:* ஆமா. சமீபத்துல கூட 'காதல் தேசத்'துல 'ஓ வெண்ணிலா' கேட்டேன். ரொம்ப நல்லா இருந்தது.

**உன்னி:** அந்தப் பாட்டு எப்பப் பாடினது தெரியுமா? ஒரு நாள் நடுராத்திரி ரெண்டுமணி இருக்கும். அன்னிக்கு மெட்ராஸ்ல நல்ல மழை. புயல் வந்ததே? அப்ப! வெளியில மழை கொட்டிட்டிருக்க, ஒழுங்கா வீடு போய்ச் சேரணும், தூங்கணும்னு நினைச்சுட்டே பாடினேன். (சிரிப்பு)

*மீரா:* நீங்க சினிமால பாடறது பத்தி உங்க நண்பர்கள், ரசிகர்கள் என்ன நினைக்கிறார்கள்?

**உன்னி:** 'ஓகே! நல்லா பாடறேன்'னு தான் பெரும்பாலும் சொல்றாங்க. சில பேர், அது தப்புன்னும் சொல்வாங்க. ஆனா என்னைப் பொறுத்தவரைக்கும் நான் சினிமா– கச்சேரி இரண்டையுமே விடறதா இல்லை. சினிமாப் பாட்டு பாடறது எனக்குப் பிடிச்சிருக்கு. சவாலா இருக்கு. அது அத்தனை சுலபம் இல்லை. தெரியுமா? தவிர அதன் மூலம் கிடைக்கிற பாப்புலாரிட்டி. அதனால என் ரெஸ்பான்ஸிபிளிட்டி வேற அதிகமாயிடுது இல்லியா? மேடைக் கச்சேரில உட்கார்ந்தா ஜனங்களுக்கு எதிர்பார்ப்பு அதிகமா இருக்கறதைப் புரிஞ்சிக்க முடியறது. அதையெல்லாம் பூர்த்தி பண்ண இன்னும் நிறைய உழைக்கிறேன்.

*மீரா:* கச்சேரியில சினிமாப்பாட்டு– லே, 'என்னவளே' பாடச் சொன்னா, பாடுவீங்களா?

**உன்னி:** கண்டிப்பா பாடமாட்டேன். சாஸ்த்திரிய சங்கீதம்னா, அதற்குரிய மரியாதை, கௌரவம் குடுக்கணும். சினிமாப் பாட்டு மட்டம்னு இல்லை. அது இந்த மேடைகளுக்குச் சரியா வராது. இதற்குன்னு வர்ற ரசிகர்களும் அதை விரும்பமாட்டாங்க.

*மீரா:* நீங்க ஒரு கிரிக்கெட் ப்ளேயர் கூடன்னு கேள்விப்பட்டிருக்கேன். இப்ப ஆடறீங்களா?

**உன்னி:** எங்க? டயமே கிடையாது. எப்பவாவது மெட்ராஸ்ல மேட்ச் நடந்தா போய் ரசிக்கறதோட சரி. ஆனா ஃப்ரெண்ட்ஸ் எல்லாம் இப்பவும் கூப்பிடுவாங்க. 'ஒரு மேட்ச்சாவது ஆட வா' அப்படீன்னு. முடியறதில்லை. (சிரிப்பு)

*மீரா:* நீங்க போலரா? பேட்ஸ்மனா?

**உன்னி:** பேட்ஸ்மேன்தான்.

*மீரா:* உங்க ஒய்ஃப் ப்ரியா ஒரு டான்ஸராமே? நிஜமாவா?

**உன்னி:** ஆமா! நல்லா ஆடுவாங்க. ஆனா மேரேஜுக்கப்புறம் பர்ஃபாமென்ஸ் எதுவும் தரமுடியாதபடி எனக்கு ஊர் ஊரா சுத்த வேண்டியதாவே இருக்கு. தொடர்ந்து கச்சேரி. இங்கேயும் வெளி நாடுகளிலேயுமா மாறிமாறி சுத்திட்டே இருக்கோம். அதனால அவங்களுக்கு பிராக்டிஸ் பண்ண டயம் கிடைக்கலை. மறுபடியும் ஆரம்பிக்கணும். சட்டுனு தொடங்கிட்டு மறுபடி விட்டா, உடம்பு வலிக்கும்... எப்படியும் சீக்கிரம் மறுபடி ஆரம்பிச்சிடுவாங்க!

*மீரா:* ரொம்ப நன்றி சார். உங்களை சந்திச்சிப் பேச முடிஞ்சதுல எனக்கு எக்கச்சக்க சந்தோஷம். இது நிஜம் தானான்னே பிரமிப்பா இருக்கு!

**உன்னி:** தேங்க்யூ.

வண்ணப்படங்கள்: **யோகா**

# சுஜாதா பக்கம்



தபால் மூலம் இப்போது ஹோமியோபதி, கம்ப்யூட்டர், எம்.சி.ஏ., எம்.பி.ஏ., இதழியல், தமிழ் இலக்கியம் போன்ற பல படிப்புகள் கற்க முடிகிறது. சிறுவயதில் தாத்தா இறந்தது போன்ற பல் வேறு காரணங்களுக்காக படிப்பைப் பாதியில் நிறுத்தியவர்கள் தம் ஆர்வங்களைத் தொடர்ந்து படிக்க வாய்ப்பு கிடைக்கிறது.

ஆனால் நவீன உலகத்தில் பிழைத்திருக்க, எத்தனையோ புதிய தந்திரங்கள் கற்க இந்த சம்பிரதாய கலாசாலைப் படிப்புக்கள் உதவுமா என்று சந்தேகமாக உள்ளது. அதனால் பல்கலைக்கழகங்களுக்கு கீழ்வரும் புதிய பாடத்திட்டங்களைப் பரிந்துரைக்க விரும்புகிறேன்.

இவைகளில் இளங்கலையோ டிப்ளமாவோ, அனுப்பும் சில்லரைப்படி வழங்கலாம்.

**1. கர்நாடக இசை இளங்கலை :** டேப் ரிக்கார்டரை எப்படி இயக்குவது, அதன் பல பாகங்கள், விசைகள், சிக்கிக் கொண்ட டேப்பை பொறுமையிழக்காமல் எப்படி விடுவிப்பது, சில கர்நாடக சங்கீத காஸெட்கள் (தலா ரூபாய் 37/- கலால் வரி தனி) அனுப்பப்பட்டு அவைகளை கேட்டு முடித்தவுடன் புன்னாக வராளி ஆடு பாம்பே ராகத்தைக் கண்டு பிடிக்கவும், சபா கச்சேரியில் காலை ஆட்டாமல் தலையை மட்டும் ஆட்டப் பழகவும் கற்ற உடன் டிப்ளமா வழங்கப்படும். (வி.பி. செலவு தனி.)

**2. வேதாந்தம் :** பகவத் கீதை மலிவுப் பதிப்பு ஒன்று சம்ஸ்க்ருதத்தில் அனுப்பப்படும் (படிக்கத் தேவையில்லை) வாழ்க்கை நிலையானதா, அடுத்த ஜென்மத்தில் ஸ்விட்ஸர்லாந்தில் பிறப்பது எப்படி, பெண்கள் ஏன் கிராப்பு வைத்துக் கொள்கிறார்கள்? இந்தியா உலகக் கோப்பையை ஜெயிக்குமா போன்ற கேள்விகளுக்கு விடை தரப்படும். தாடி வளர்ப்பது பற்றி குறிப்புக்கள் தரப்படும் (முதல் நூறு மாணவர்களுக்கு மட்டுமே இந்த சலுகை).

**3. டி.டி.எஸ் ஏ. - டிப்ளமா இன் டபிள் சினிமா அப்ரிசியேஷன் :** தமிழ் சினிமாவில் எப்போது எழுந்து ஒன்றுக்குப் போகலாம், எப்போது வீட்டுக்குப் போகலாம், எந்த சினிமாவுக்கு ப்ளாக் டிக்கெட் வாங்கலாம். அவைகளை உடனுக்குடன் விற்பது எப்படி, டூயட் பாடல்களின்போது வரும் பெண்களை எண்ணுவது எப்படி. போன்ற விவரமான பாடங்கள் கொண்டது. இந்த டிப்ளமா பெற்ற பின் எம்.கே.எஸ். - மாஸ்டர் ஆஃப் கவுண்டமணி-செந்தில் படிப்புக்குத் தயாராகலாம்.

**4. புதுக்கவிதை திறனாய்வு :** இளங்கலை முதுகலை. பு.க. என்பது என்ன என்பது குழப்பப்படும். உரைநடையை எந்த எந்த இடத்தில் உடைக்க வேண்டும், மனைவியின் எந்த எந்த நகைகளை எந்த இடத்தில் விற்று எப்படி புதுக் கவிதை தொகுப்பு கொண்டு வருவது, சிறு பத்திரிகைகளின் விலாசங்கள் (மாசா மாசம் புதுப்பிக்க வேண்டிய பட்டியல்) கொடுக்கப்படும். பயிற்சி இறுதியில் நீங்கள் எழுதிய புதுக்கவிதை ஒன்று காட்டாங்குளத்தூர் ஆசிரமத்தில் வாசிக்கப்படும். இதன் தொடர்ச்சியாக சினிமாப் பாடல்கள் எழுதுவது எப்படி என்கிற முதுகலை படிப்பில் ராக மோகம், மணிக்குயில், தங்க மயில், எசப்பாட்டு, சுகராகம், ராகசுகம் போன்ற தமிழ் சினிமாவில் பயன்படுத்தப்படும் அறுபத்து ஒன்பது வார்த்தைகளும் பட்டியலாகத் தரப்படும். அதனுடன் அம்மம்மமா, அட போன்ற அசைகளின் லிஸ்ட் தரப்படும். பானிப்பூரி, ஜிலமா ராணி போன்ற அன்னிய மொழிச் சொற்களைப் பயன்படுத்துவதன் இலக்கண விதிகள் கற்பிக்கப்படும். இந்தப் பாடல்கள் எழுதுவதற்கு உண்டான ஸனம், கஸம், ஜுல்ப் இவானா, மஸ்தானா போன்ற உருது வார்த்தைகளும் கற்பிக்கப்படும். பான்பராக் போடுவது எப்படி, குட்காவின் நன்மைகள், ஜிப்பா பைஜாமா எப்போது போட வேண்டும், தமிழை எப்படிக் காப்பாற்றுவது போன்ற சுவையான விஷயங்களும் பாடத் திட்டத்தில் உள்ளன (குறிப்பு இந்தப் பாடத்திற்கு இந்த வருஷம் இடம் இல்லை).

**5. மனோதத்துவம், இன்றைய சித்தாந்தங்கள்:** ஏன் சிலரை மட்டும் நமக்குப் பிடிக்கிறது? சிலரை மென்னியை நெரித்து கூவத்தில் தள்ள விரும்புகிறோம்? வெறுப்பு என்பது என்ன என்ன? ஜாதி, வகுப்பு, சமய வெறுப்பு, சும்மா வெறும் வெறுப்பு என மூன்று பகுதிகளாக போதிக்கப்படும். முதுகலை வகுப்பில் கொலை செய்துவிட்டு எப்படி சரியாக வளர்க்கப்படாத காரணத்தைச் சொல்லி பொது மன்னிப்பு கேட்டு தண்டனையிலிருந்து தப்பிப்பது என்பது போதிக்கப்படும். முதல் முன்னூறு மாணவர்களுக்கு இலவசமாக, பிரான் டப்பாய் அனுப்பப்படும்.

**6. வானவியல் :** சூரியனை எப்படி கண்டு கொள்வது? சூரியன் திடீர் என்று காணாமற் போய்விட்டால் செய்ய வேண்டிய முதல் உதவிகள். சப்தரிஷிகள் யார் யார், அவர்கள் பத்தினிகளின் பெயர் என்ன, பத்திரிகைகளுக்கு வாரபலன் எப்படி எழுதுவது, ஆயிரம் பலன்கள் எழுதி அவைகளை எப்படி மாற்றிப் போடுவது என்பது விளக்கப்படும்.

பி.கு. இவை அனைத்தும் தபால் மூலமே பெற வேண்டிய பாடங்கள். நேரில் சந்திக்கவோ கடிதப் போக்குவரத்தோ கூடாது.

**(மீண்டும் அடுத்த வாரம்)**

# உள்ளே வரலாமா?

4

ராகி. ரங்கராஜன்

இரண்டு வருடங்களாய்ப் பேசிப் பழகிய பெண்ணாகத் தெரியவில்லை... புதுசாக ஒரு பொம்மையைப் பொட்டலம் கட்டிக் கையில் கொடுத்தது போலிருந்தது. ஒருக்களித்து கட்டிலின் ஓர் ஓரத்தில் தூங்கிக் கொண்டிருந்தாள் சுகன்யா. அவள் இடுப்பு வளைவு ஏற்படுத்திய சொற்ப இடத்தில், கட்டில் விளிம்பில் உட்கார்ந்தபடி பார்த்தான் ஸ்ரீராம்.

ஒப்பனையில்லாத முகம். ஆழ்ந்த தூக்கத்தில் அமைதி தவழ்ந்தது. சுற்றமும் நட்பும் இட்டுவிட்ட பிரசாதங்கள் நெற்றியை நிறைத்திருந்தன. வகிட்டில் ஒரு இஞ்ச் நீளத்திற்குக் குங்குமம். நாளெல்லாம் இறுக்கிக் கட்டி வைத்து, 'அப்பாடா' என்று அவிழ்த்து வைத்த கூந்தல் சுதந்தரமாய்த் தலையணையில் விரிந்து கிடந்தது. சற்றுமுன் சிரித்த சிரிப்பில் கண்ணீர் வழிந்தோடி, கண் மையைக் கரைத்துக் கன்னத்தில் பரப்பியிருந்தது. அதைத் துடைக்க நீண்ட கரத்தை, பின்னுக்கு இழுத்துக் கொண்டான் ஸ்ரீராம்.

சுகன்யாவின் சிரிப்புக்குக் காரணமாயமைந்த பூத்தோரணங்களை அண்ணாந்து பார்த்தான். இலேசாக வாட்டமுற ஆரம்பித்திருந்தான்.

"பட், ஸ்ரீராம், திஸ் இஸ் அப்ஸர்ட்" முதலிரவு அறையில் மனைவி பேசக் கேட்ட முதல் வார்த்தைகள் - சொல்லிவிட்டு ஒருகணம் அவனைப் பார்த்தாள். அப்படியும் அடக்கமாட்டாமல் சிரித்துக் குலுங்கினாள்.

அறை அலங்காரத்தின் அபத்தமான சினிமாத்தனம் அவனுக்கும் சிரிப்பூட்டியதென்றாலும் "உஷ்... மெல்ல சுகி.. வெளியில கேட்கும்..." என்றான்.

பக்கத்து மேஜையிலிருந்து பழங்களைப் பார்த்தவள், இன்னொரு சுற்று சிரிப்புக்குத் தயாரானாள்.

"ப்ளீஸ் சுகன்யா, சத்தமா சிரிக்காதே..."

"ஸ்ரீராம் என்னால இதை நம்ப முடியலை. இன்னும் இரண்டு நிமிஷம் ஆனா, ஏதாவது டூயட் பாட்டு அமானுஷ்யமா கேட்கும் போலேயிருக்கு..."

ஸ்ரீராம், "பெரியத்தையைக் கதவு கிட்டே நின்னு பாடச் சொல்றேன். உனக்குத் தெரியுமா...? நிஜமாவே அப்படி ஒரு சம்பிரதாயம் இருக்கு... பெரியத்தை பையன் சுரேஷ் கல்யாணத்தன்னைக்கு ராத்திரி, அவன் பெட்ரூம் வாசல்ல நின்னு அரை டஜன் லேடீஸ் பாடித் தீர்த்தாங்க..."

"எதுக்கு...?"

"எல்லாம் ஒரு சிருங்கார ரஸானுபவத்துக்கு செட்டிங் போடத்தான்..."

"எல்லா சம்பிரதாயமும் பிடிக்கலைன்னாலும், புரியறது ஸ்ரீராம். ஆனா ஒண்ணே ஒண்ணுதான் பிடிக்கவுமில்லை, புரியவுமில்லை..."

"என்னது...?"

"வாசல்ல அவ்வளவு அழகா கோலம் போட்டு வைச்சிருந்தது... வசந்திக்கு அதைப் போட நிச்சயமா ஒரு மணி நேரமாவது ஆகியிருக்கும். நம்மளை நிக்க வைச்சு, சிவப்புத் தண்ணி சுத்தி அந்த கோலத்துமேலேயே கொட்டிட்டாங்களே! எப்படி மனசு வந்தது...?"

"அதுக்கு வசந்தி ஏதாவது வாயைத் திறந்தாளா பார்த்தியா...?"

"ஆமாம், எனக்கு ஆச்சரியமாயிருந்தது. பழைய பழக்கங்கள் எதையுமே எதிர்க்காம, கேள்வி கேட்காம ஒத்துக்கறதுதான் இந்த வீட்டோட தத்துவம்னு நினைக்கிறேன்."

"அது மட்டுமில்லே சுகி... கோலம்ங்கறது எப்படியிருந்தாலும் இன்னிக்கில்லைன்னா நாளைக்கு அழிஞ்சுதான் போகும். இன்னொரு சுவாரஸ்யமான விஷயம், வைச்ச பொருளை எடுக்கவும் போட்டக் கோலத்தைக் கலைக்கவும் வீட்டுல ஒரு குழந்தை வேணும்னு வசனம் கூட சொல்றதுண்டு..."

சொல்லிவிட்டு, ஸ்ரீராம் அவள் கைகளைப் பற்றி, கட்டிலின் மேல்

அவளை அமர்த்தினான். அவனும் பக்கத்தில் உட்கார்ந்த போது சடாரென்று தோளில் முகம் புதைத்துக் கொண்டாள்.

''எனக்கு வெட்கமாயிருக்கு...'' என்று மெலிதாய் அவள் குரல் மட்டும் வெளிப்பட்டது.

"ஏய், எதுக்கு இப்ப வெட்கமெல்லாம்...?" கூச்சத்தில் அவன் குரலும் கரகரத்துப் போனது.

விடுபட்ட ஸ்ப்ரிங் போல தலையை உயர்த்தினாள். "நம்பிட்டியா? ஓ, ஸ்ரீராம்! நீ ரொம்ப ரொம்ப சிம்பிள்! நான் நிஜமாவே வெட்கப்படறேன்னு நினைச்சியா?'' திரும்பவும் சிரிக்க ஆரம்பித்தாள்.



## தங்க நகைப் பரிசு!

**இன்னும் 22 வாரங்கள் வெளிவரப் போகிற இந்தத் தொடர்கதை, வாராவாரம் ஓர் எழுத்தாளரின் பெயரில் வெளியாகும். ஆனால் முழுக்கதையையும் எழுதுபவர் ஒரே எழுத்தாளர்தான்! யார் அவர்?**

**வாரா வாரம் படித்து, யூகித்துக் கொண்டே இருங்கள். கடைசி வார அத்தியாயத்துடன் வெளியாகப் போகிற கூப்பனில், 'தொடரை எழுதியவர் யார்?' என்கிற உங்கள் யூகத்தை எழுதி அனுப்புங்கள்.**

**உங்கள் யூகம் சரியானதாக இருந்தால் உங்களுக்குத்தான் மின்னும் தங்க நகைப் பரிசு!**

**பலர் சரியான விடை எழுதியிருந்தால் குலுக்கல் முறையில் ஓர் அதிர்ஷ்டசாலி தேர்ந்தெடுக்கப்படுவார். ஆசிரியர் தீர்ப்பே இறுதி.**

அவள் காதைப் பிடித்துத் திருகி, முகத்தை நெருக்கமாய் இழுத்து உச்சி முகர்ந்தான்.

"முதல்ல லைட்டை அணைக்கணும்."

"ஓய்...!"

"பின்னே, நான் டிரெஸ் மாத்த வேண்டாமா? இங்க அட்டாச்ட் பாத்ரூம் கிடையாது. வெளியில இப்பப் போனா பெரிய ரகளையானாலும் ஆயிடும். உன் எதிரே எப்படி மாத்தறது...?" கேட்டபடி எழுந்து போய் கேஸிலிருந்து சிவப்பு கவுன் ஒன்றை எடுத்தாள். லைட் சுவிட்சை சுவர்களில் தேடினாள்.

"நான் அணைக்கிறேன்..." அறையின் மறுகோடிக்குப் போய் சுவிட்சை அணைத்தான் ஸ்ரீராம்.

சற்று முன் அவள் சொன்ன வார்த்தைகள்... 'நான் நிஜமாவே வெட்கப்படறேன்னு நினைச்சியா...' எது நிஜம்...? அவள் வெட்கமா? அவள் நடிப்பா...? யோசனை வந்தது அவனுக்கு.

சுகன்யா பட்டுப் புடைவையைக் களையும் ஓசையும் அசைவுகளும் புலனாக, அவள் திக்கிலிருந்து பார்வையை விலக்கி நின்றான்.

லைட்டை மீண்டும் போட்டபோது சிவப்பு ஸ்லீவ்லெஸ் நைட்டி அணிந்திருந்தாள் அவள். புடைவையும் ரவிக்கையும் கட்டில் மீது கிடந்தன. அவற்றை அள்ளி கோட் ஸ்டாண்டில் போட்டுவிட்டு, கண்ணாடி வளையல்களைக் கழற்றி வைத்தாள்.

"நீ டிரெஸ் மாத்தலையா ஸ்ரீராம்?" அவன் இன்னும் லைட் சுவிட்சின் அருகிலேயே இருந்தான்.

"மாத்திக்கறேன்..." மீண்டும் லைட்டை அணைத்தான்.

"இப்போ ஏன் லைட்டை அணைக்கறே...?"

"நான் டிரெஸ் மாத்தறதுக்குத்தான்..."

க்ளுக்கென்று இருட்டில் சிரித்தாள்.

"உனக்கும் வெட்கமா ஸ்ரீராம்?"

"தெரியலை..."

பட்டு வேட்டி சட்டையிலிருந்து, லுங்கி குர்தாவுக்கு மாறி, லைட்டை மீண்டும் போட்டபின் என்ன செய்வதென்று புரியாமல் தவித்தான்.

"படுக்கலை...?"

"ஊம்... லைட்டை ஆஃப் பண்ணிடவா...?"

"வேண்டாம், வா."

கட்டிலில் சம்மணமிட்டு உட்கார்ந்து அவளைப் பார்த்தான். மெதுவாகத் தலையை அவன் மடியில் வைத்தாள்.

"நான் ரொம்ப சந்தோஷமா இருக்கேன் ஸ்ரீராம்."

"அதானே வேணும்?"

"ஆனா நீ அப்படி இல்லைன்னு நினைக்கிறேன்..."

"அடடா, நோ சுகி..."

"உங்க அப்பாவோட முரட்டுப் பிடிவாதத்துனால இப்படி அவசரமா கல்யாணம் நடந்திருக்கேன்னு வருத்தம்தானே? வசந்தி கல்யாணத்தை நினைச்ச மாதிரி முடிக்கலையேன்னு வருத்தம், இல்லை?"

"அந்த வருத்தமெல்லாம் உண்மைதான் சுகி... ஆனா அதுக்காக இந்த சந்தோஷம் குறைஞ்சுடுமா?"

"எந்த சந்தோஷம்?"

"சுகன்யா இனிமே எப்பவும் என் பக்கத்துலே இருப்பாங்கற சந்தோஷம்..."

மடியில் புதைந்து கிடந்த தலையைத் திருப்பி அவனைப் பார்த்தாள். "தாங்க்யூ" என்று திருப்தியாக விழிகளை மூடிக் கொண்டாள்.

அவ்வளவு சீக்கிரத்தில் அவள் தூங்கிப் போவாள் என்று ஸ்ரீராம் எதிர்பார்க்கவில்லை. மடியிலிருந்து அவள் தலையை மெதுவாகத் தலையணையில் இறக்கி வைத்தபோது இலேசாக அசைந்து 'குட் நைட்' சொன்னதோடு சரி.

சற்று நேரம் உலாத்திவிட்டு, அவள் ஒருக்களித்துக் கிடந்த பக்கமாய் வந்து உட்கார்ந்து, இப்போது முகத்தைப் பார்த்துக் கொண்டிருக்கிறான்.

இந்த முகத்தைப் பார்த்த பிறகும், இதன் துடைத்து வைத்த வெகுளித்தனத்தைப் பார்த்த பிறகும் அப்பா, அம்மா இளகவில்லையே?

"ஒரு பொண்ணுக்கு மனசுல இடங் கொடுத்துட்டே! அவ மனசுல ஒரு நம்பிக்கையை வேற வளர்த்து விட்டுட்டே. இனிமேல் எதுக்காகவும் காத்திருக்கிறதோ தள்ளிப்

# ஆன்லைன் இருக்க கவலை எதற்கு ?

ஆண்டாளின் பாசுரத்தை முணுமுணுத்தபடி பார்த்தசாரதி கோவிலின் பிரகாரத்தை வலம் வந்த சம்பூர்ணம் மாமி மூலவரை சேவித்த பின்பு அருகிலுள்ள மண்டபத்தில் வந்து அமர்ந்தாள்.

சற்றே இருட்டத்தொடங்கியதும் வீட்டிற்கு கிளம்பலாம் என்றெண்ணி மாமி எழுந்தபோது, "சம்பூர்ணம் மாமி" என குரல் கேட்டு திரும்பினாள்.

"என்ன மாமி, ஆத்துக்கு கிளம்பிட்டேளா?" என்று கேட்டாள் அடுத்த வீட்டு புவனா.

" ஆமாண்டிம்மா, ஆமா, உன் ஆத்துக்காரனுக்கு சிங்கப்பூர்ல ஏதோ எலக்ட்ரானிக்ஸ் கம்பெனியில் வேலை கிடைச்சு போயிருக்கானாமே. கேள்விப்பட்டேண்டி" என்றாள் சம்பூர்ணம்.

" நானே உங்ககிட்ட சொல்லணும்னு இருந்தேன் மாமி. அவர் சிங்கப்பூர் போயி கிட்டத்தட்ட 4 மாசமாயிடுத்து. இங்க அவர் வேலை செஞ்ச கம்பெனி திடீர்னு மூடிட்ட உடனே நேக்கு கையும் ஓடலை. காலும் ஓடலை. ரெண்டு குழந்தைகளை வச்சுண்டு எப்படி காலம் தள்ளுவோம் பகவானே ஒரு 'நல்ல இடத்துல நல்லபடியா வேலைகிடைக்கணும்னு. இதோ... இதே பெருமாள்கிட்டத்தான் வேண்டிண்டேன். பெருமாளோட அனுக்கிரஹம் தான் அவருக்கு அடுத்த பத்தாவது நாளே சிங்கப்பூர் கம்பெனி வேலை கிடைச்சது. இப்போ அவருக்கு அங்க நம்ம ஊர் கணக்குப்படி பார்த்தா 18,000 ரூபாய் சம்பளம் மாமி. பகவான் எங்களை சோதிச்சாலும் கைவிடலை மாமி ! " என்று உணர்ச்சி வசப்பட்டு கண்கலங்கினாள் புவனா.

" ஏண்டி புவனா, உன் ஆத்துக்காரன் நன்னா சம்பாதிக்க ஆரம்பிச்சுட்டான். இனி நேக்கு ஒரு குறையும் வராதுடி. எதுக்கு போயி கண்கலங்கறே?" என்றபடி பரிவுடன் புவனாவை தேற்றினாள் சம்பூர்ணம்.

" ஆமா, உன் ஆத்துக்காரன் அனுப்புற பணத்தை சேமிக்கறியா, இல்லையா? நல்லபடியா சேமிச்சு உன் குழந்தைகள் பேர்லேயும் உன் பேர்லேயும் டெபாசிட் பண்ணிட்டு அக்கடான்னு இருடி புவனா." என்றாள் சம்பு மாமி.

" அது விஷயமாத்தான் உங்களைக் கேட்டு முடிவு பண்ணலாம்னு இருந்தேன் மாமி. அடுத்தவீட்டு விசாலம் மாமி கூட ஏதோ முன்ன பின்ன தெரியாத ஃபைனான்ஸ் கம்பெனியில் போட்டுட்டு இப்போ திண்டாடிண்டு இருக்கா. அந்த நிலைமை எனக்கும் வந்துடுமோன்னு நேக்கு பயமாயிருக்கு மாமி." என்றாள் புவனா.

" பயப்படாத புவனா. நான் சொல்ற ஃபைனான்ஸ் கம்பெனியில் டெபாசிட் பண்ணு."

"என்ன கம்பெனி மாமி?" கண்களில் ஒரு தெம்புடன் கேட்டாள் புவனா.

" Online Finance Company. அவங்களோட தனிப்பட்ட முறையில் செய்யற சேவை, நேர்த்தியான தொழில்முறை டெபாசிட் பண்றவாளுக்கு நிச்சயம் பிடிக்கும். மேலும் ஆன்லைனோட CARE 'A'(FD) Rating உன்னோட பணத்துக்கு முழுப்பாதுகாப்பளிக்குது.

" வட்டி எவ்வளவு மாமி தருவாங்க?"

"ஆன்லைனோட வட்டிவிகிதம் RBI- யோட சட்டதிட்டங்களுக்கு உட்பட்டதால் நியாயமான வட்டி 'டாண்'னு உன்னோட வீடு தேடி வரும். என் தங்கையும் அவளோட ஆத்துக்காரரும் சிங்கப்பூர்ல தான் செட்டிலாயிருக்கா. அவா கூட Online Finance Company-ல தான் டெபாசிட் பண்ணியிருக்கா. இவ்வளவு ஏன் புவனா, எங்க ஆத்துக்காரரோட Pension, Gratuity பணம் கூட Online-ல தான் டெபாசிட் பண்ணியிருக்கோம். உள்ளூர்காரா மட்டுமில்லாம வெளிநாட்டில் இருக்கிற நம்ம ஊர்காராளும் ஆன்லைன்ல டெபாசிட் பண்றாங்கன்னா எந்த அளவுக்கு அவங்களுக்கு ஆன்லைன் மேல நம்பிக்கையிருக்குன்னு தெரியுதோ?"

" சரி மாமி, அந்த கம்பெனி பத்தின விவரங்கள் எப்படி கிடைக்கும்?

பேச்சுவாக்கில் இருவரும் சம்பூர்ணம் மாமியின் வீட்டு வாசலை நெருங்கி விட்டிருந்தனர். புவனாவை வீட்டுக்குள் அழைத்துச் சென்ற சம்பு மாமி ஷெல்பிலிருந்த ஆன்லைன் கார்டை எடுத்து,

"புவனா, நீ 8276768/8265301/8234072-ன்ற டெலிபோன் நம்பர்ல இல்லேன்னா 8267008-ன்ற ஃபேக்ஸ் நம்பர்ல ஆன்லைனை தொடர்பு கொண்டா உனக்கு தேவையான விவரங்கள் உன்னோட ஆத்துக்கே வந்து சேரும். ஆனா ஒண்ணு மட்டும் நிச்சயம். ஆன்லைனோட தனிப்பட்ட சேவையை உணர்ந்துட்டேன்னா, நீயே மத்தவங்களுக்கு சொல்லுவே ஆன்லைனைப் பத்தி" என்றாள் சம்பு மாமி.

" சரி மாமி, நாழியாயிடுத்து. ஆத்துல பசங்க ரெண்டும் ஊட்டி அடிச்சிண்டிருப்பா. நான் கிளம்பறேன்." என்றபடி நகர்ந்தாள் புவனா.

" இருடி புவனா. வெள்ளிக்கிழமை அதுவுமா வந்திருக்கே. இந்தா குங்குமம் இட்டுண்டு போ" என்றபடி குங்குமச்சிமிழை நீட்டினாள் சம்பூர்ணம்.

குங்குமத்தை இட்டுக்கொண்ட புவனா, "மாமி, நாளைக்கு உங்காத்திலிருந்து ஒரு போன் பண்ணிக்கணும்" என்றாள்.

"என்னடி ! திடீர்னு ஆத்துக்காரர் ஞாபகமா?" என்று நமுட்டுச் சிரிப்புடன் சம்பூர்ணம் மாமி கேட்க ... சற்றே நாணத்துடன் புவனா, " இல்லை மாமி ! ஆன்லைனுக்கு." என்றபடி தெளிவாக புன்னகைத்தாள்.

**CARE 'A' RATING**






**ஆன்லைன் ஃபைனான்சியல் சர்வீசஸ் லிமிடெட்**

248, இராயப்பேட்டை நெடுஞ்சாலை,
சென்னை-600 014.
தொ.பே.: 8276768-8265301-8234072
ஃபேக்ஸ்: 8267008.



ONL/101/96

தோசை மாவு புளித்து விட்டால், சிறிது தண்ணீரை ஊற்றுங்கள். சிறிது நேரம் கழித்து, மேலாகத் தேங்கியிருக்கும் தண்ணீரைக் கொட்டி விட்டால் மாவில் உள்ள புளிப்பு நீங்கி விடும்.

– வயலூரர் ஆர். பார்த்திபன்.

போடறதோ தப்பு ஸ்ரீராம்..."

வசந்தி மூலம் செய்தி உடைந்த அன்று அப்பா ரொம்ப தீர்மானமாய்ச் சொல்லி விட்டார்.

"அப்பா, வசந்தி கல்யாணம்..."

"இனிமே அந்தக் கவலையை நாங்க பட்டுக்கறோம்..."

புதுக் கத்தரிக்கோலாக வெட்டினார்.

"ஜாதகம் இருக்கா, அந்தப் பொண்ணுக்கு...?"

"அப்பா, அவ அம்மா பெங்காலி, அப்பா தமிழர்..."

"எல்லாம் தெரியும். அவளுக்குன்னு மனுஷா யாராவது இருந்தா தந்தி அடிச்சு வரவழைச்சுடு..."

**க**ல்கத்தாவிலிருந்து முகர்ஜி வந்தபோது கௌரவமாய் வரவேற்று கலகலப்பாய்ப் பேசி, மறு மாதத்திலேயே முகூர்த்தம் குறித்து விட்டார் அப்பா.

அத்தனை கல்யாண காரியங்களையும் வசந்தியும் அம்மாவும்தான் செய்தார்கள்.

ரொம்ப ரொம்ப சிரத்தையாய், முனைப்போடு பருப்புத் தேங்காய் முதல் பட்டுப் புடைவை வரை வரிசைப்படுத்தி வாங்கினார்கள். ஐம்பதாயிரத்துக்கு குறையாமல் செலவாகியிருக்கும்... அப்பா அவனிடம் ஒரு பைசா கூட வாங்க மறுத்தார்.

"அவளுக்கு பிளவுஸுக்கு எவ்வளவுடா துணி எடுக்கணும்...?"

"எழுபத்தஞ்சு பத்திரிகை அவகிட்டே கொடுத்தா போதுமோல்லியோ?"

"கல்யாணத்தன்னிக்குத் தலையை பின்னிக்கணும்னு சொல்லிடு அவகிட்டே..."

"அண்ணா, அவா பக்கத்துக் கல்யாணங்கள் மாதிரி கல்கத்தா கவீட் போடலாமா கேட்டுக்கோ அவங்ககிட்டே..."

குமார் கூட சுகன்யாவைப் பெயர் சொல்லியோ, மன்னி என்றோ குறிப்பிடவில்லை. அம்மா 'அவள்' என்று அரூபமாய்ச் சொன்னாள். அப்பாவோ 'அந்தப் பொண்ணு' என்ற அநாமதேய விளியைக் கடந்து வர வேயில்லை. வசந்தி...? அவளையறியாமல் 'மன்னி' என்று சொல்ல வாய் வந்தால் கூட மாற்றிக் கொண்டாள்.

கல்யாண வேலைகள் வேகமாகவும் கச்சிதமாகவும் நடந்தாலும் அத்தனையிலும் 'மனமொப்பாமை' என்ற மேல் பூச்சு கண்ணாடிக் காகிதம் சுற்றியதுபோல் ஒட்டிக் கிடந்தது.

"அதை எப்போது கிழித்தெறிவார்கள்? எப்போது சுகன்யா 'நம்மாத்துக் குழந்தை' ஆவாள்...? கவலையுடன் தூங்காமல் யோசித்தான் ஸ்ரீராம்.

சுகன்யாவின் நம்பிக்கை அவன் கவலையை அதிகரித்தது – தன்னால் இந்த வீட்டில் ஒன்றி விட முடியும் என்ற நம்பிக்கை. அந்த ஆழ்ந்த நம்பிக்கையின் வலிமை, அப்பா – அம்மாவினுடைய பிடிவாதத்துக்கும் இருக்கிறதே!

விலகி நின்று பார்க்க, ஒரு சுவாரஸ்யமான போட்டியாகப்பட்டது அவனுக்கு. ஆனால் சுகன்யாவின் முகத்தைப் பார்த்தபோது, அந்த சுவாரஸ்யம் அடிபட்டு, சங்கடமாய் வயிற்றைப் பிசைந்தது.

ஆதுரத்துடன் அவள் தலையைத் தடவிவிட்டு, மறு பக்கமாய் வந்து படுத்துக் கொண்டான். நீண்ட நேரம் கழித்துத் தூங்கிப் போனான்.

**சு**கன்யா அவனைத் தட்டி எழுப்பிய போது, பிரஷர் குக்கர் ஓசை வீரியமாய்க் கேட்டது. சோர்வில், கண்கள் மீண்டும் சொருகிக் கொண்டன.

"ஸ்ரீராம், எழுந்திரேன் ப்ளீஸ்... உங்கம்மா அழறாங்க... என்னன்னே புரியலை. பலமா அழறாங்க..."

வாரிச் சுருட்டிக் கொண்டு எழுந்தான்.

(தொடரும்)



"புது மானேஜர் மொடாக்குடியரா யிருப்பார் போல இருக்கு.."

"எத வச்சி சொல்றே?"

"ஒரு மரியாதைக்கு காப்பி சாப்பிடலா மான்னு கேட்டதுக்கு, "சோடா ஊத்தியா, கலர் ஊத்தியான்னாரே!"

– டி.எஸ். திருமலைராயன்




1996 ஆகஸ்ட் 25
தாது ஆவணி 9
மலர் : 55
இதழ் : 4


# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## பிரதமரின் தடுமாற்றம்!

கிருஷ்ணா நதி நீரை ஆந்திராவும் கர்நாடகமும் எவ்வாறு பகிர்ந்துகொள்ள வேண்டும் என்று பசாவத் அறிக்கை ஏற்கெனவே வகுத்துக் கொடுத்திருக்கிறது. அதை மீறி, அலமாட்டி அணையின் உயரத்தை அதிகரிக்கத் திட்டமிடுகிறது கர்நாடகம். ‘அதன் மூலம் கிடைக்கும் உபரிநீர், மின்சார உற்பத்திக்குத்தான் பயனாகும். ஆந்திராவுக்கு அளிக்கப்படும் நீரின் பங்கு குறையாது’ என்கிறது கர்நாடக அரசு.

ஆந்திர முதல்வர் சந்திரபாபு நாயுடு இதை நம்புவதாக இல்லை. தமது பிரச்னை தீராவிட்டால் கௌடா அரசுக்கு வழங்கி வரும் தெலுங்கு தேச ஆதரவை விலக்கிக் கொள்ள நேரும் என்கிறார்!

காவிரி விஷயத்தில் தமிழ்நாடு சந்தித்து வரும் பிரச்னையைப் பார்க்கும்போது கர்நாடகத்தின் போக்கு குறித்து ஆந்திர முதல்வரின் சந்தேகம் நியாயமானதாகவே தோன்றுகிறது.

தேவே கௌடா, இந்தப் பிரச்னையை ஒரு பிரதமராகச் சந்தித்துச் செயல்படாமல், ஒரு கட்சிக்காரராகவும் குறுகிய மாநிலக் கண்ணோட்டத்துடனும் அணுகியிருக்கிறார்.

‘பச்சாவத் அவார்ட் என்பது சட்டபூர்வமான அறிக்கை; அதை இம்மியும் பிசகாமல்




கடைப்பிடிப்பதுதான் முறை' என்று வெகு எளிதில் பிரச்னைக்குத் தீர்வு சொல்லியிருக்கலாம் பிரதமர்.

ஆனால், அதன் மூலம் கர்நாடக ஜனதா தளம் மற்றும் அம்மாநில மக்களிடையே அவப் பெயரைச் சம்பாதித்துக் கொள்ள நேருமோ என்று பயந்து, ஐக்கிய முன்னணியின் பிரதான தலைவர்கள் நால்வர் அடங்கிய கமிட்டியை அவசரமாக அவர் நிறுவ, அந்த கமிட்டி, இரு மாநிலங்களுக்கும் நேரில் சென்று ஆராய்ச்சி செய்ய இன்னொரு நிபுணர் குழுவை நியமிக்க முற்பட்டது.

இரு மாநில அரசுகளுக்கிடையேயான பிரச்னைக்கு, பிரதமர் ஐக்கிய முன்னணி கட்சி உறுப்பினர்களைக் கொண்டு தீர்வுகாண முயன்றது முதல் தவறு. நீதிமன்றத் தீர்ப்பின் அந்தஸ்து பெற்ற பசாவத் அறிக்கை அமுலில் இருக்கையில், இன்னொரு குழுவை நியமித்து ஆராய முற்பட்டது இரண்டாவது தவறு. இதைச் சட்டஅமைச்சகமே சுட்டிக்காட்டிய பிறகு, 'நிபுணர் குழு அதிகாரபூர்வமானது அல்ல; உளவாக்கட்டிக்குத்தான்' என்று ஒரு அந்தர்பல்டி அடித்திருக்கிறார் பிரதமர்.

உயர் அதிகாரிகளைக் கலந்தாலோசித்துச் செயல்பட்டிருந்தால் இரு தவறுகளையும் பிரதமர் தவிர்த்திருக்கலாம்.

காவிரிப் பிரச்னைக்கே சுமுகமாகத் தீர்வு காணமுடியாமல் தவித்துக் கொண்டிருக்கும் தமிழக முதல்வர், அலமாட்டி பிரச்னையை ஆராய அமைக்கப்பட்ட கமிட்டியில் இடம் பெற்றதன் மூலம் இந்தத் தவறுகளுக்குத் தாமும் உடன்பட்டிருக்கிறார் என்பது மேலும் வேதனையான விஷயம்.

பதவியைக் காப்பாற்றிக் கொள்ளும் நோக்குடன் மட்டுமே செயல்படாமல், பிரதமர் நாட்டின் தலைவராய் நடுநிலை வகித்து, நியாயம் வழங்க முற்படுவது மிகவும் அவசியம்.







## ராவ் கிளப்பியிருக்கும் புயல்!

நரசிம்மராவ் பேரிலான மோசடி குற்றச்சாட்டை விசாரணைக்கு எடுத்துக் கொள்வதை இடைக்காலத் தடை மூலம் நிறுத்தி வைத்துள்ளது உச்சநீதி மன்றம்.

தமது பேரிலான குற்றச்சாட்டுகளுக்கு வலுவான ஆதாரங்கள் எதுவுமில்லை என்று ராவ் வாதாடுகிறார்.

'அத்தகைய ஆதாரங்கள் இல்லாத நிலையில், குற்றம் சாட்டப்பெற்ற ஒரு நபரை நீதிமன்றத்தில் ஆஜர்படுத்துவதும் விசாரணைக்கு உட்படுத்துவதும் முறைதானா?' என்ற அடிப்படை சட்டச் சிக்கலே இப்போது எழுப்பப்பட்டுள்ளது. இந்தச் சிக்கலுக்கு முடிவு காணப்படும் வரை ராவ் பேரிலான வழக்கு நடைபெறாது.

நரசிம்ம ராவ் பேரில் தொடரப்பட்டிருப்பது மோசடி வழக்கு. மோசடிக்குத் துணியக் கூடிய யாருமே அதற்கான ஆதாரங்களை அள்ளித் தெளித்துக் காரியம் செய்ய மாட்டார்கள்.

தாம் நிரபராதி என்கிற நிலையில் உறுதியாக உள்ள ஒருவர், சட்டபூர்வமான நடவடிக்கையைச் சந்திக்க ஏன் தயங்க வேண்டும்...?

இந்நாள் வரை, சாமானியர்கள் சம்பந்தப்பட்ட வழக்குகளில் எழுப்பப்படாத சட்டச் சிக்கல், இப்போது முன்னாள் பிரதமர் தொடர்பான வழக்கு என்பதால் முக்கியத்துவம் பெற்றிருக்கிறது.

எழுப்பப்பட்டிருக்கும் புதிய சிக்கலுக்கு உச்சநீதிமன்றம் வழங்கும் முடிவானது, குற்றவியல் சட்டத்தில் ஒரு பெரிய திருப்புமுனையாக அமையும்.

# செய்திகள், வாசிப்பது செம்பியன்...

"அறுபத்தொன்பது சதவீதம் இட ஒதுக்கீடு குறித்து உச்ச நீதிமன்றம் வழங்கிய தீர்ப்பை, அம்மன்றமே மறுபரிசீலனை செய்ய வேண்டும்" என்று தமிழக அரசு செய்த முறையீட்டினை உச்ச நீதிமன்றம் நிராகரித்து விட்டது. இதற்காக தமிழக அரசோ, தமிழக மக்களோ கொஞ்சமும் வருந்த வேண்டிய அவசியமில்லை. தீர்ப்பை உணர்ச்சி வசப்படாமல், நிதானமாகப் படித்தால் அதில் உள்ள நியாயம் புரியும். ஐம்பது சதவிகிதத்துக்கு மேல் இட ஒதுக்கீடு செய்வது முறையல்ல என்று உச்ச நீதிமன்றம் கருதுகிறது. அதே சமயம் 69 சதவீதம் ஒதுக்கீடு செய்ய வேண்டும் என்ற தமிழக அரசின் கோரிக்கையை அது நிராகரிக்கவும் இல்லை. "முதலில் 69 சதவீதம் ஒதுக்கீடு செய்யுங்கள். பின்னர் இதனால் பாதிக்கப்படுகிற 19 சதவீதத்தினருக்காகக் கல்வி நிலையங்களில் கூடுதல் இடங்களை உருவாக்குங்கள். அவற்றுக்கு முற்படுத்தப்பட்டவர் மட்டுமின்றி பிற்படுத்தப்பட்டவரும் பொதுவாகத் தகுதி அடிப்படையில் போட்டியிடலாம்'' என்கிறது. இதை விடவும் சமரசமான, நியாயமான தீர்ப்பு ஒன்று இருக்க முடியாது. இப்போதே கூட, 'ஒதுக்கீடு ஆன இடங்கள் தவிர, பாக்கியுள்ள அனைவருக்கும் பொதுவான இடங்களிலும் எண்பது சதவீதத்தைப் பிற்படுத்தப்பட்டோர்தான் தகுதி அடிப்படையில் பெறுகின்றனர்' என்று தமிழக அரசே கூறியிருப்பதை உச்ச நீதிமன்றம் அடிக்கோடிட்டுக் காட்டுகிறது. ஆக மொத்தம், 119 இடங்களில் 10 இடங்களைத்தான் முற்படுத்தப்பட்ட வகுப்பினர் தங்களுக்குள் பகிர்ந்து கொள்கிறார்கள் என்றாகிறது. இதிலே ரொம்ப மகிழ்ச்சியான விஷயம், பிற்படுத்தப்பட்டோர் என்று கருதப்பட்டவர்கள் எந்த அளவுக்கு முன்னேறி இருக்கிறார்கள் என்பதே.



கல்வி பற்றி எண்ணும்போது, தொழில் வளம் பெருக்கும் நோக்கில் செயல்படும் தமிழக அரசு, இனி பாலிடெக்னிக்குகளுக்குத்தான் அதிக முக்கியத்துவம் தர வேண்டும் என்பதை வலியுறுத்த வேண்டியிருக்கிறது. எதிர்காலத்தில் பி.ஏ., பி.காம் போன்ற பட்டதாரிகளுக்கு வேலையே இருக்காது. அவர்களின் வேலைகளை இப்போதே கம்ப்யூட்டர்கள் விழுங்கி ஏப்பம் விட்டுக் கொண்டிருக்கின்றன.

'தமிழகத்தின் பல்வேறு இடங்களில் 100 மெகாவாட் உற்பத்தி சக்தியுள்ள இருபது அனல் மின் நிலையங்கள் அமைக்கப்படும்' என்ற முதல்வரின் அறிவிப்புக்கு 'சபாஷ்' போடலாம்; 'பலே' சொல்லலாம். தொழில் வளம் பெருக அடிப்படைத் தேவை மின் வசதி என்பதை அரசு உணர்ந்திருப்பது மட்டுமல்ல; 2000 மெகா வாட் உற்பத்தி சக்தி கொண்ட ஒரு மின் நிலையத்தை விடவும் 100 மெகாவாட் உற்பத்தி செய்யும் இருபது சிறிய மின் நிலையங்களை அமைப்பதில் அனுகூலம் உண்டு. இதன் மூலம் நெடுந்தூரத்துக்கு மின்சாரத்தை எடுத்துப் போகும்போது ஏற்படும் (Transmission Loss) இழப்புக்களைக் கட்டுப்படுத்தலாம். பின் தங்கிய மாவட்டங்கள் துரிதமாகத் தொழில் முன்னேற்றம் காணலாம். விவசாய அடிப்படையிலான தொழில்களுக்கும் ஏற்றுமதி தொடர்பான தொழில்களுக்கும் முன்னுரிமை தரப்பட வேண்டும். காரணம், இந்த மின் நிலையங்களுக்கு எரிபொருள், பெட்ரோலியம். அதனை கப்பல் கப்பலாக அயல் நாடுகளிலிருந்து தருவிக்கும்போது அதை ஈடுகட்ட ஏற்றுமதி செய்ய வேண்டுமல்லவா!

கல்கியில் இடம் பெறும் 'வி.ஐ.பிக்களுக்கு வந்த கடிதங்கள்' வரிசையில் பிரசுரிக்க, முதல்வரிடம் ஒரு கடிதம் கேட்டபோது, திடுக்கிடவைக்கும் ஒரு தகவல்தான் கிடைத்தது! எமர்ஜென்ஸி சமயத்தில் கலைஞர் வீட்டுக்குள் புகுந்து தேடிய அதிகாரிகளுக்கு, தோதாக ஏதும் கிடைக்காமல் போனாலும் அவருக்கு வந்திருந்த ஏராளமான கடிதங்களை அள்ளிப்போய் விட்டார்கள்! அவற்றுள் கலைஞர் பொக்கிஷமாகப் பாதுகாத்த ராஜாஜி, அண்ணா, துரை, வாசன் போன்றோரது கடிதங்களும் உண்டு. போனவை போனவைதாம்! இன்று வரை திரும்பப் பெற முடியவில்லை! என்ன ஆயினவோ! எமெர்ஜென்ஸி கொடுமைகள் அனைத்திலும் தலையாய கொடுமை இத்தகைய இலக்கிய அழிப்புதான்.




"கட்சித் தலைமையை மாத்தியாகணும்னு பணிவாச் சொல்லப் போறீங்க, சரி.... அதுக்கப்புறம் உங்க எதிர்காலத் திட்டம் என்னன்னு யோசிச்சு வைச்சிருக்கீங்களா?"




"பாண்டிட் குவீன்னு ஏதாவது ஒரு ரயிலுக்குப் பேர் வைச்சாலும் வைப்பாங்க!"

## இதோ... ஹா ஹா ஹா...

"நீங்க பாட்டுக்கு, புதுசு புதுசா இட ஒதுக்கீட்டை அறிவிச்சிக்கிட்டே போறீங்க. இப்போ இருநூறு சதவிகிதத்தைத் தாண்டியாச்சு!"






"ஏழ்மையை ஒழிச்சிட்டா அப்புறம் அடுத்த தேர்தல்ல என்ன சொல்லி வோட்டுக் கேட்க முடியும்.... பேசாம இருங்க!"

— இந்தியன் எக்ஸ்பிரஸ் சிண்டிகேட்

# மாமூல் பெரிசா? மகாத்மா

● வி. பரமசிவம், அரசரடி.

*? அ.தி.மு.கவைக் களங்கப்படுத்த வேண்டும் என்ற நோக்கத்திலேதான் கருணாநிதியின் நடவடிக்கை உள்ளது. என்கிறாரே காளிமுத்து?*

! அ.தி.மு.க.வைக் களங்கப்படுத்தியவர்கள், களங்கப்படுத்தி வருகிறவர்கள் – அ.தி.மு.க.வினரேதான்; கருணாநிதி அல்ல!

● ஓ. மனோகரன், நெற்குப்பை.

*? தி.மு.க. ஆட்சியில் சட்டம் ஒழுங்கு...?*

! சட்டம் சரி; ஒழுங்கு...? அவ்வப்போது அமைச்சர்களே மீறுகிறார்கள். கோவை ரயில் நிலையத்தில் அதிகாலை போய் இறங்கினால், அதே ரயிலில் வந்த அமைச்சருக்கு ஸ்டேஷன் வாசலில் மேடை போட்டு வரவேற்பு இத்தியாதி! கொஞ்ச நேரம் போக்குவரத்து பாதிக்கப்படத்தான் செய்தது.

● ஆர். முருகானந்தம், எஸ். மாரியூர்.

*? ஐ.ஏ.எஸ். அதிகாரிகளைக் கைது செய்தால் நிர்வாக இயந்திரம் செயல்பட முடியாது என்று ஜெயலலிதா கூறுகிறாரே?*

! நிர்வாக இயந்திரம் என்பது ஜெ. ஆதரவு பெற்ற லஞ்ச ஊழல் அதிகாரிகளால் இயக்கப்பட்டு, ஜெ ஆதரவு பெற்ற சிலரது நன்மைக்காக மட்டுமே இயங்கி வந்தது. இப்போது நேர்மையான அதிகாரிகளால் இயக்கப்பட்டு மக்களின் நன்மைக்காக இயங்குகிறது. இதை எப்படி 'ஜெ'வால் பொறுத்துக் கொள்ள முடியும்...? அதுதான் புலம்புகிறார்!

● அஜார், தேனாம்பேட்டை.

*? 'தெய்வ தண்டனைக்குப் பயப்படாதவர்கள் ஜெயிலில் கொசுக்கடிக்குப் பயப்படுகிறார்கள்' என்று ப. சிதம்பரம் கூறுவதை ஏற்கிறீர்களா?*

! 'கொலைக்கு அஞ்சாதவர்கள் கொசுக்கடிக்கு அஞ்சலாமா?' என்று கேட்டிருந்தால் இன்னும் பொருத்தமாக இருந்திருக்கும்! ஒரு முன் ஜாமீன் மனுவில் மூட்டைப் பூச்சியை வேறு சேர்த்துக் கொண்டிருக்கிறார் ஜெ. ஐயோ, பாவம்!

● இரா. இராமசாமி, திருவண்ணாமலை.

*? திரைப்படங்களினால் ஒழுக்கம், பண்பாடு, அரசியல், கல்வி ஆகியன நாளுக்கு நாள் குன்றி வருவதை விளக்க தமது 'சூப்பர்'களுள் யாரேனும் ஒருவர் திரைப்படம் தயாரித்துப் புரட்சி செய்யலாமே?*

! வேண்டாம் சார், இந்த ஐடியா! சில பத்திரிகைகள், ஆபாசத்தைக் கண்டிப்பது போல் கண்துடைப்புச் செய்து, எத்தகைய ஆபாசம் என்று போட்டோ போடுகிறார்களே... அதுபோல்தான் சினிமா தயாரிப்பாளர்களும் நடந்து கொள்வார்கள்.

● மா. நளினி, திருச்சி – 8.

*? கலைஞர் பழிவாங்குகிறாரா?*

! இல்லை, பணியாற்றுகிறார்!

● நா. ரெங்கப்பிரசாத், சிறுகமணி.

*? எனக்குத் தெரியாமல் தவறுகள் நடந்துள்ளன என்று ஜெயலலிதா கூறியுள்ளாரே?*

! ஒரு திருத்தம்: தவறுகள் அல்ல; மாபெரும் குற்றங்கள்! அவரது தலைமையில்தான் குற்றங்கள் நடந்தன என்கிறபோது, அதற்கான பொறுப்பையும் அவர்தான் ஏற்றுக் கொண்டாக வேண்டும். தவிர, அவரே செய்துள்ள குற்றங்களும் உண்டு.

● வி. சத்தியப்ரியன், சென்னை – 15.

*? குஜராத் மாநில பா.ஜ. தலைவர் வகேலா அக்கட்சியிலிருந்து நீக்கப்பட்டுள்ளது பற்றி...?*

! கோஷ்டி மோதல், கட்சிப் பிளவு என்பதெல்லாம் பாரதீய ஜனதாவிலும் உண்டு என்பதை நிரூபித்துக் கொண்டிருக்கிறார்கள். ஆட்சிப் பொறுப்புகள் கிடைப்பதற்கு முன்பு இருக்கும் கட்சிக் கட்டுக்கோப்பு அது கிடைத்ததுமே எப்படி நொறுங்கி விடுகிறது!

• துணிவுடன் பக்குவம்!



# காந்தி விருது பெரிசா?



* மூட்டைப்பூச்சி மனு!

* சதவிகிதம் சரியில்லை!





* வேதனையான விஷயம்!

* பாடாத தாலாட்டு!





* களைந்த கட்டுக்கோப்பு!

● க. மாரியப்பன்,
கோயமுத்தூர் – 11.

*? எத்தனையோ சந்தங்களில் பாடிய பாரதியார், தாலாட்டுப் பாடாதது ஏன்?*

! அன்று மட்டுமல்ல, இன்றும் மக்களுக்குத் தேவை எழுச்சி தானே தவிர, தூக்கம் அல்ல என்பதால்தான்!

● டி. செல்வன், ☐
மேடவாக்கம்.

*? மாழூல் பெரிசா? மகாத்மா காந்தி விருது பெரிசா சார்...?*

! மெகா மாழூலர்கள் பயந்து பயந்து முன் ஜாமீன் பெறுவதைப் பார்க்கிற மினி மாழூலர்களுக்கு இனி மகாத்மா விருதுதான் பெரிதாகத் தெரியும்.

● இ. ராதாகிருஷ்ணன், பட்டுக்கோட்டை.

*? 'வீட்டு வசதி வாரியத்தில் ஒரு சதவிகிதம் கூட ஊழல் நடக்க சந்தர்ப்பம் கிடையாது' என்று முன்னாள் வீட்டு வசதித் துறை அமைச்சர் ரகுபதி கூறியுள்ளாரே?*

! சே! அ.தி.மு.க. ஆட்சியில் யாராவது ஒரு சதவிகித ஊழலோடு நிறுத்திக்குவாங்களா என்ன..? குறைந்தபட்சம் ஐம்பது சதமாவது தேறணும்... குமரி மாவட்டத்தில் மட்டுமே வீ.வ.வா பணிகளில் ஐந்து கோடி ரூபாய் ஊழலாம் – சமீபத்திய செய்தி.

● ஸ்ரீவித்யா காளிதாஸ், சிதம்பரம்.

*? கொடைக்கானல் ஹோட்டல் தொடர்பான லஞ்ச ஊழல் வழக்கில் தான் கைது செய்யப்படக்கூடும் என்று கருதி ஜெயலலிதா முன்ஜாமீன் கோரி மனுதாக்கல் செய்துள்ளாரே...?*

! அதுவும் எப்படி அசத்தலாக வாதாடியிருக்கிறார்! அந்த வழக்குக்கான தீர்ப்பில், 'மனம் செலுத்தாமலே முதல்வர் கோப்புகளில் கையெழுத்திட்டிருக்கிறார்' என மாண்பமை நீதிபதியே கூறியிருப்பதைச் சுட்டிக்காட்டி, 'மனம் செலுத்தப் படாத விஷயம் திட்டமிட்ட சதியாக எப்படி இருக்க முடியும்? எனவே நான் நிரபராதி' என்கிறார்! வக்கீல் இல்லாமலேதான்!

● இர. ரூபன். கோபாலசமுத்திரம்.

*? மிஸ்டர் சுடுகாடு (செல்வகணபதி) கைது செய்யப் பட்டிருக்கிறாரே?*

! சுடுகாட்டில் வெட்டியான்தான் பணம் பிடுங்குவதாகப் பலரும் புலம்புவார்கள். அந்த ஏழைகளைக் கோயிலில் வைத்துக் கும்பிடலாம் என்கிற அளவுக்கு இவர்கள் கேவலமாக நடந்து கொண்டிருக்கிறார்களே!

● வாசுதேவன், மும்பை – 86.

*? வெட்கப்பட, வேதனைப்பட வேண்டிய விஷயம்...?*

! 'ஜாகிர் ஹுசைன் தபலா இதுதானா' போன்ற பாடல் வரிகள் – அதற்கான படப்பிடிப்பு வெட்கப்படவைக்கிறது. தபலா நிபுணர் ஜாகிர் ஹுசைன் கூட அவ்வரிகளுக்கு ஆட்சேபனை எழுப்பாமல் விட்டாரே என்பது வேதனைப்பட வைக்கிறது.

● தேவந்தி துரைராஜ், திருப்பத்தூர் - 2.

*? சென்னையில் நடந்த பெண்மாலைப் பொழுது நிகழ்ச்சி பற்றி...?*

! நூதனமான அந்த நிகழ்ச்சிக்குத் தலைமை தாங்கிய நடிகை ரேவதி, 'பெண்களுக்குப் பெண்களே எதிரி' என்று பேசியிருப்பது கவனத்தைக் கவர்கிறது. இதில் பெருமளவு உண்மை இருப்பதைக் கண்கூடாகப் பார்க்கிறோம். நிலைமை மாற வேண்டுமானால், முதலில் குறை இருப்பதை ஒப்புக் கொள்கிற பக்குவமும் துணிவும் வேண்டும். ரேவதியிடம் அவை இருப்பது தெரிகிறது.

☐ ரூ. 25 பரிசு பெறுபவர் :
டி. செல்வன்,
அருள்சோனிக்கடை,
3/15, வேளச்சேரி மெயின் ரோடு,
மேடவாக்கம், சென்னை – 601 302.

✉ "உள்ளே வரலாமா" தொடர் போன வாரம் சுஜாதா எழுதிய மாதிரியே இருந்தது. அட, இந்த வாரம் பாலகுமாரன் எழுதுகிற மாதிரியே உள்ளது? ஒரு வழி பண்ணாமல் எங்களை விட மாட்டீர்கள் போலிருக்கே?
ஒட்டன்சத்திரம், செ.ரா. ரவி.

✉ "உள்ளே வரலாமா" - பரிசு கிடைக்கிறதோ, இல்லையோ! கதையே ஒரு பரிசு தான்! மிகவும் நேர்த்தியாக செதுக்கித் தள்ளும் அந்தக் கதாசிரியர் தஞ்சைக்காரர் என்பது வார்த்தைப் பிரயோகங்களிலிருந்து யூகிக்க முடிகிறது.
மேல்பட்டி, எல்.மாறன்.

✉ நெஞ்சில் உறுதியும், நேர்மைத் துணிவும் கொண்ட அமலாக்கப் பிரிவு வக்கீல் பிரகாஷ் பற்றிய தகவல்கள், அவர் ஒரு அசாதாரண மானவர் என்பதை நிரூபித்தது.
மதுரை-16, வி.பி. காந்தி.

# ஒரு வழி பண்ணாம விடமாட்டீங்களா?

✉ மக்களின் அன்றாட பிரச்னைகளை அமைச்சரின் பார்வைக்குக் கொண்டு சென்றதற்குப் பாராட்டுக்கள். மேலும் இப் பகுதிக்கு 'களத்தில் கல்கி' என்பதற்குப் பதிலாக 'மக்கள் மனத்தில் கல்கி' என்று பெயரிடலாம்.
சிறுநாயக்கன்பட்டி, கே. வேலுச்சாமி.

✉ "புலிகள் பிரச்னைக்குப் புதிய தீர்வு" காண தேவகௌடா, கலைஞர் இருவரது காதுகளையும் நைசாகக் கடித்திருக்கிறீர்கள். தங்களுடையது, இன்றைய காலகட்டத்தில் ஆக்க பூர்வமான யோசனை. அண்டை நாடு தீப்பற்றி எரிந்து, வெந்து சாகும்போது, நமக்கென்னவென்று மௌனமாக இருப்பது மனிதத்தன்மைக்கு அழகல்ல. தங்கள் யோசனையை சீர்தூக்கி ஆராய்ந்து செயல் பட்டால் சமாதானமும் அமைதியும் ஏற்பட நிச்சயம் வழியுண்டு!
எலந்தங்குடி, எம்.இசட். மும்தாஜ் பேகம்.

**ரூ.20/- பரிசுக் கடிதம்**

✉ புலிகள் - தமிழ் ஈழம் - பிரச்னைகள் பற்றிய தலையங்கம் மிக அருமை. நடுநிலைமையோடு அலசியது மட்டுமின்றி, தீர்வும் கண்டுள்ளீர்கள். தூதர்கள், இரகசியப் பயணம், கூட்டாட்சித் தத்துவம், ராஜதந்திரம்- நல்ல தீர்வுகள். ஆட்சியைப் பிடிப்பதிலும் அதைத் தக்க வைத்துக் கொள்ளவும் குறுக்கு வழி தேடும் நம்மூர் கூட்டாட்சியாளர்கள் இலங்கை பிரச்னைக்குத் தீர்வு காண்பார்களா? ஒரு காவிரிப் பிரச்னை ஓய்ந்த பாடில்லை; ஒரு கிருஷ்ணா வந்த பாடில்லை- எனினும், பத்திரிகை தர்மம் காக்கும் கல்கிக்குப் பாராட்டுக்கள்.
விருதுநகர், இரா. சந்திரசேகர்.

✉ கண்ணைப் பாதுகாப்பது பற்றி 'ஹலோ சுகமா?' பகுதியில் வழங்கிய குறிப்புகள் மிகவும் அருமை + எளிமை!
விபீஷணாபுரம், ஸ்ரீவித்யா காளிதாஸ்.

✉ 'திருமணமே வேண்டாம்' என்று வித்தியாசமாகச் சிந்திக்கும் பெண்கள் இன்னும் பலர் நாட்டில் உள்ளனர். அதே சமயம், இவர்கள் ஒவ்வொரு ஆண்மகனையும் துல்லியமாக எடை போடும் திறமைசாலிகள் என்பதையும் கவனிக்க வேண்டும். 'புருஷர்களே வேண்டாம்' என்று இவர்கள் பேட்டி கொடுத்த பக்கங்களுக்கு அருகிலேயே 'சுந்தர புருஷன்' - விமர்சனம்! நல்ல வேடிக்கைதான்!
சென்னை-39, சுகந்தி நாராயண்.

✉ அரசியல், சாதாரண மனிதர் (தொண்டர்)களை என்ன பாடுபடுத்துகிறது என்பதை வெகு யதார்த்தமாக உணர்த்தியது, உள்காயம் சிறுகதை!
அரவக்குறிச்சிப்பட்டி, எம். அசோக்ராஜா.

✉ 'சும்மா இருந்த காதை... வரைஞ்சி கெடுத்தாளாம் 'ஆன்ட்டி'... சுவாரஸ்யமான காதை... ஸாரி... கதை...
சென்னை - 33, மணி மதியண்ணன்.

✉ நாணா ஷியாம் எழுதிய "யுத்தச் சூழலில் எங்கள் பிரதேசம்" என்ற கவிதையில் 'ஓணான் சரசரத்தால்கூட ஓடி ஒளிந்து கொள்வோம்' என்ற வரிகள், இலங்கையின் இன்றைய சூழ்நிலையைச் சரியாய் படம் பிடித்துக் காட்டியது.
மானம்பாடி, பூமகன்.

✉ தன் தாயின் பிணத்தைப் பார்க்காவிட்டால் கூடப் பரவாயில்லை என்று தன் கட்சிக்குத் துரோகம் செய்ய மறுத்த பாப்பா உமாநாத்தின் மன உறுதி வியக்க வைத்தது.
சாமல்பட்டி, சமுதாயப்பிரியன்.





# புன்னகை என்ன விலை?

"ஆச்சர்யமா இருக்கே, இந்தத் தொண்ணூறு வயசுல எப்படிப் பாட்டி உன் பல் இவ்ளோ அழகா, முத்தாட்டம் இருக்கு?"

"கழட்டித் தரேன், நீயே பார்த்துக்கோ!"

– இது சமீபத்துல நான் எங்கேயோ படிச்ச ஜோக். தொண்ணூறு இல்லை; இப்பல்லாம் அம்பது வயசுக்கு மேற்பட்டவங்களே பல் வலி, சொத்தை, பிடுங்கணும்னு நிறைய பேர் ட்ரீட்மெண்ட்டுக்கு வர்றதா டாக்டர்கள் சொல்றாங்க.

ஜப்பான்ல ஒரு கிழவர், பல்லால கடிச்சே இரும்பு வளையத்தை உடைச்சுடறார்னு போன வாரம் ஒரு நியூஸ் வந்ததே, கவனிச்சீங்களா?

எல்லாம் பராமரிப்புதான் காரணம்! கடவுள் நமக்கு முப்பத்திரண்டு பல்லு குடுத்திருக்கறது, வெறுமனே கடிச்சி முழுங்கறதுக்கு மட்டுமில்லை.

வீட்டு வரவேற்பறைகளுக்கு எப்படி கோப்பைகளும் ஷீல்டுகளும் அழகு தருதோ, அது மாதிரிதான் முகத்துக்குப் பல்.

பல்லை எப்படிப் பராமரிக்கறது?

ஆலும் வேலும்னு ஆரம்பிச்சி நான் போரடிக்க விரும்பலை. இதோ பத்து பாயிண்ட்ஸ் தரேன். இதுல எத்தனை நீங்க ரெகுலரா கடைப்பிடிக்கறீங்கன்னு டிக் பண்ணிட்டே வாங்க.

ஏழுக்கு மேல டிக் வாங்கிடிச்சின்னா நிச்சயமா நீங்க புன்னகை மன்னன்தான்! நீங்க பெரிய ஆளு! உங்க புன்னகைக்கு விலை மதிப்பே கிடையாது! உங்க பல்லு உறுதியோடவும் பளபளப்பாகவும் இருக்கும்னு அர்த்தம்!

1. தினசரி ரெண்டு வேளை பல் தேய்க்கறீங்களா? சும்மா கரகரன்னு நாலு இழுப்பு இழுக்கறதில்லை. ஒவ்வொரு முறையும் பத்துலேருந்து பதினைஞ்சு நிமிஷம் – பல்லோட எல்லா பக்கங்களும் படறாப்பல!

2. வாரத்துக்கு இரண்டு தடவை கேரட், வெள்ளரிக்காய்களை நல்லா கடிச்சி சாப்பிடற பழக்கம் உண்டா? (இது ஈறுகளுக்கும் பலம்!)




3. ஐஸ்கிரீம், ஸ்வீட்ஸ், பயங்கர சில்லுன்னு இருக்கற ஐஸ்வாட்டர் இதையெல்லாம் நிறைய சாப்பிடறதில்லையே? (ஐஸ்கிரீம் சாப்பிட்டா, பல்லுல படாம சாப்பிடறது பெட்டர்.)

4. கரகரன்னு இருக்கற பல்பொடி, செங்கல், கரி, களிமண்ணுனு கிடைக்கறதையெல்லாம் போட்டு, பாத்திரம் தேய்க்கற மாதிரி தேய்க்க மாட்டீங்கதானே?

5. டெய்லி ஒரு சூயிங்கம் மெல்லுவீங்களா? அது ரொம்ப நல்ல பழக்கம்! பல்லு உறுதியாகும். தவிர இடுக்குகள்ல இருக்கிற உணவுப் பொருட்கள் வெளியில வந்துடும். (ஷுகர் பேஷன்ட்ஸ் கவனமா இருக்கணும். ஸாக்ரீன் போட்ட சூயிங்கம் சில இடங்கள்ல மட்டும்தான் கிடைக்குது.)

6. 'தேங்காய் துருவல் மாதிரி இருக்கு உன் பல்' அப்படீன்னு யாராவது கேலி பண்ணா, அதுக்காக 'கிளிப்'பெல்லாம் போட்டுக்க மாட்டீங்கதானே? செயற்கையா பல் வளர்ச்சியைத் தடுக்கப் பார்த்தா அது ஒரு கட்டத்துக்கு மேல பல்லோட உறுதிப்பாட்டையே கெடுத்துடும். (இந்தப் பிரச்னைக்கு சிம்பிள் வழி – எப்பவும் வாயை முழுக்க மூடியே வெச்சிருக்கறது! வளர்ச்சி அப்ப உள்ளுக்குள்ளேயே கட்டுப்படும்!)

7. வெத்தலை-சீவல்-புகையிலை, உங்க டச்-அப் தண்டபாணியோட ஃபேவரட் பான் பராக், சிகரெட், தண்ணி இதெல்லாம் உங்களுக்கு இல்லைதானே? (இருந்தா நாப்பது வயசுல உங்க பல்லு, என்ன தேய் தேச்சாலும் மாலை நேர சூரியன் கலருக்கு வந்துடும்!)

8. ரெண்டு வருஷத்துக்கு ஒரு தரமாவது பல் டாக்டர் வீட்டுக்கு கேஷுவலா போய் நலம் விசாரிச்சுட்டு வருவீங்களா? (உங்க நலம்தான்!)

9. கால்ஷியம், இரும்புச் சத்துள்ள காய்கறிகளை விரும்பிச் சாப்பிடுவீங்களா? பொன்னாங்கன்னி கீரை, கேரட், வெண்டைக் காய் இந்த மாதிரி.

10. பல் வலி எடுத்தா, பாட்டி சொன்னாங்க, தாத்தா சொன்னாருன்னு புகையிலை, நாரத்தங்காய் இதையெல்லாம் அடக்கிக்க மாட்டீங்கதானே?

சிரிப்புதான் முகத்துக்கு நிஜமான அழகு. ஆனா, பல்லு ஒழுங்கா இல்லைன்னா நாம சிரிச்சி யார் பார்க்கறது?

சப்போஸ் ஏதாவது ஆக்ஸிடென்ட் ஆகி, அல்லது யாராவது 'பல்லை உடைப்பேன்னு' சொல்லிட்டு, சொன்னபடியே செஞ்சிட்டா அழகு போயிடுமேன்னு பயப்படறீங்களா?

டோன்ட் வொர்ரி! நவீன மருத்துவத்துல எதுக்குத்தான் வழி கண்டுபிடிக்கலை? பாதி உடைஞ்ச பல்லை மாத்தி, முழுசா செயற்கைப் பல் பொருத்தறது, அதிகப்படியா வேணாம்னு தோணற பல் நீளத்தை ஃபைல் பண்ணி நீக்கி, அழகா ஷேப் தர்றது இதெல்லாம் கூட சாத்தியம்தான்.

அதுக்காக, 'தெற்றுப் பல்' இருந்தா ரொம்ப அழகா இருக்குமேன்னு நினைச்சி 'எக்ஸ்ட்ராவா ஒரு தெற்றுப் பல் வெச்சி விடுங்க'ன்னு டாக்டரைப் போய் கேக்காதீங்க. அவர் ரெண்டு பல்லைத் தட்டிக் கையில குடுத்தா நான் பொறுப்பில்லை!

- சுமி



# நவராத்திரியை முன்னிட்டு எங்கள் விசேஷ சேமிப்பு திட்டம்

# சில்வர் டெபாசிட் திட்டம்



டெபாசிட்டுகள் வரவேற்கப் படுகின்றன

**EXPRESS**
**FINANCIAL EXCHANGE LIMITED**

**பாங்க் ஆப் அமெரிக்காவின் சார்பு நிறுவனம்**

- வாகனங்களுக்கான கடன்கள்
- பங்குகள் மீதான கடன்கள்

அங்கீகரிக்கப்பட்ட டீலர் **அமெரிக்கன் எக்ஸ்பிரஸ்** டிராவலர்ஸ் செக்குகள்

பதிவு அலுவலகம்: நெ. 9, அட்வேல் டவர், தெற்கு போக் சாலை, சென்னை-600 017.
போன்: 4340325, 4340329, 4341403, ஃபாக்ஸ்: 4341518.

• சென்னை • ஹைதராபாத் • விஜயவாடா • விசாகப்பட்டினம் • பெங்களூர் • திருச்சி
• கும்பகோணம் • கோயம்புத்தூர் • பாண்டிச்சேரி

1996 மார்ச் 4ந் தேதி எகனாமிக் டைம்ஸில் வெளியான எமது சட்ட பூர்வ விளம்பரத்தைத் தொடர்ந்து இந்த விளம்பரம் வெளியாகிறது.

Helios & Mathison

## அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியில் மூன்றாம் பரிசு பெறும் கதை - 2

# புதிய ஜதிக்கீதங்கள்

ஜி. நாராயணன்

கொஞ்சம் தவறிவிட்டது. ரிவர்ஸ் எடுத்தபோது, பூந்தொட்டி தெரிந்தது. சுவர் தெரிந்தது. ஆனால் கவனம் இல்லாததால் கார் பூந்தொட்டியைச் செல்லமாகத் தட்டி, சுவரில் எருமை உரசலாக உரசி நின்றது.

கதவு திறந்து குருமூர்த்தி இறங்கினார். வலம் வந்து பார்த்தார். மட்கார்டில், 'நச்'சென்று ஒரு உள் வாங்கல். கையகலத்திற்கு நகங்கல்.

"சகுனம் சரியில்லே! உள்ளே வந்து தண்ணி குடிச்சிட்டுப் போங்க!" வழியனுப்ப வந்த கமலம் பதைத்தாள். "டிரைவருக்கு என்ன ஆச்சு...? லீவா? வரவர சுப்பையா ரொம்ப லீவு போடறான். நீங்கதான் கேட்கிறதே இல்லே!"

"விடேன்!" என்றார்.

"பாவம்! பையனோட வேலை விஷயமா அவன் அலை அலைன்னு அலையறான்..."

"வேலையா? எதற்கு வேற இடத்திலே போய் அலையணும்? அந்தப் பையன் பேர் என்ன? 'ராஜா'தானே? போன வருஷம் ஊட்டிக்கு நம்ப காரை டிரைவ் பண்ணிட்டு வந்தானே! அவன் தான். நான் என்ன சொல்றேன்னா சுப்பைய்யாவுக்கு வயசா யிடுத்து. மெதுவா கழட்டி விட்டுட்டு, அந்த ராஜாவைக் கூப்பிட லாம்! உங்களுக்கு சுப்பையா டிரைவரா இருந்த மாதிரி, நம்ப குமாருக்கு ராஜா இருக்கட்டுமே! அழகா அமைஞ்சிடும்."

பதில் சொல்லவில்லை.

"டைரக்டர் மகாதேவன்கிட்டே நம்ப குமார் விஷயமா இன்னிக்குப் பேசறீங்களா...?"

"எதற்கு...?"

"எதற்கா...? மியூசிக் டைரக்டர் குருமூர்த்தியோட பிள்ளை. உங்க வாரிசும் உங்களை மாதிரியே பெரிய இசையமைப்பாளரா வர வேண்டாமா?"

"பேசறேன்."

"சொல்றேன்'னு பளிச்சுன்னு வரமாட்டேங்குதே.. எப்பப்பாரு இழுத்த மாதிரிதான் பதில்."

"கமலம், அவன் போக்கிலேயே விடு. அவனுக்கு எதில் ஆர்வம் இருக்கோ, அதைச் செய்யட்டும்...!"

"நம்ப குமாரா? சந்தேகமில்லாம மியூசிக்கிலேதான் இண்ட்ரஸ்ட்! அதுதான் அந்த ரத்தத்திலேயே இருக்கே."

குமாருக்கு இந்த இருபதுக்கு, இதமான பேச்சு இல்லை. விட்டுக் கொடுக்கிற மனசு இல்லை. கெட்ட சகவாசம் இருக்கிறது. மமதை இருக்கிறது. இதையெல்லாம் மீறி, திறமை இருக்கிறதா? கற்பனை இருக்கிறதா? இசையில் நாட்டம் இருக்கிறதா? 'அதுதான் அந்த ரத்தத்திலேயே இருக்கே!'

– குபீரென்று சிரிப்பு பொங்கிற்று! அலை அலையாக ஒரு சிரிப்பு வந்து கொண்டேயிருந்தது. அடக்க முடியாமல். நினைத்து நினைத்து கண்களிலே ஜலம் வந்தும் இந்தச் சிரிப்பு நிற்கிறாற் போல் இல்லை. என் பாட்டன்...? முப்பாட்டன்? அவர்கள் ரத்தத்தில்...? ஹா... ஹா... ஹா...

ஸ்டுடியோவைத் தொடும்போது நன்றாக விடிந்து விட்டது! கேட்டை ஒட்டின மாதிரி, கொத்தாக நாலைந்து பேர் நின்றிருந்தார்கள். இவரைப் பார்த்ததும் அதிலிருந்து ஒரு இளைஞன் ஓடி வந்தான். முகம் மலர்ந்தான்.

"வணக்கம் சார்... என் பெயர் ராமநாதன்! நான் 'பரதன் ஸ்ருதி'ன்னு ஒரு மியூசிக் குரூப் நடத்தினேன். நீங்ககூட போன வருஷம் தலைமைதாங்கி... காமராஜர் அரங்கில்..."

லேசாக நினைவு வந்தது.. பழம்பெரும் மியூசிக் டைரக்டர்... பெரியவர் பெயரை வைச்சிண்டு இருக்கே... அவரைப் போல் நீயும் பெயர் எடுக்க வேண்டும் என்று ஏதோ சொன்னதாக... ஆமாம்... அன்று இவன் ஏதோ புதிதாகச் செய்தானே? நினைவில்லை. ஆனால்... அந்த இரண்டு மணி நேரத்தில் கிடைத்த நிறைவு!

"நஷ்டம் வந்தது. நிறுத்திட்டேன். அப்புறம்.. மெல்லிசை கேசட்டுகள். ரெண்டு நாடகம். டீ.வி. விளம்பரம்.. எல்லாம் செஞ்சேன். நிறைய டியூன் போட்டு வைச்சிருக்கேன். பார்க்கிறீங்களா?"

"இப்ப நேரம் இல்லையே...!"

"உங்க அஸிஸ்டெண்டா எடுத்துக்கிட்டு.. ஒரே ஒரு சான்ஸ் கிடைச்சா... எனக்கு புதுசு புதுசா ஏதாவது செய்யணும்னு ஆசை இருக்கு. வெறி இருக்கு. அதற்கு வடிகாலா..."

"எதுவும் இல்லையா...?"

"ஒரே சான்ஸ்! தூள் கிளப்பிடுவேன். பிரமாதப் படுத்திடுவேன். நம்பிக்கை இருக்கு. ஒரு வாய்ப்பு கிடைக்கணும். நீங்கதான் உதவணும்."

இரண்டு நிமிடங்கள் இருக்குமா...? அதற்குள் அந்தத் துடிப்பா...? தன்னம்பிக்கையா? ஆர்வமா? எதனால்? தெரியவில்லை. அந்த உருவம் மனத்தில் சற்று நின்றது.

மத்தியானம் போன் வந்தது. டயர் கம்பெனியிலிருந்து வெங்கடேஷ் பேசினார்.

'என்ன குருமூர்த்தி சார்! ரொம்ப பிஸி'யா?"

"ஓடறது.."

"வந்து.... இன்னிக்கு காலையிலே உங்க ஞாபகம் திடீர்னு வந்தது. எப்படின்னு கேட்கலியே? ஆபீஸ்லே 'ப்ரோகராமர்' இன்டர்வியூ நடக்கிறது. அதிலே... ஒரு பையன் 'ராஜா'ன்னு. உங்க பேரை 'ரெஃபரென்ஸா' கொடுத்திருந்தான். 'உங்களை நல்லாத்



தெரியும்'னு சொன்னேன் அவன்கிட்டே..."

"சுப்பையான்னு என்கிட்டே ஒருத்தர் ரொம்ப வருஷமா இருக்கார்... அவர் பையன் இந்த ராஜா."

"நீங்களே 'போன்' பண்ணுவீங்கன்னு கூடக் கொஞ்சம் ஏமாந்துட்டேன்!"

எதற்கு? கேட்கவில்லை. மனத்திற்குள் குடைந்து கொண்டார். ஓ சிபாரிசா? ச்சு... ராஜாவிற்கு இவர் குணம் தெரியும். சிபாரிசு என்று யாரும் இவரை நெருங்க முடியாது. 'சரக்கு நல்லா இருந்தா தானே வித்துப் போகும். லொட்டு லொசுக்கு ஓட்டை, உடைசல், இதற்கெல்லாம்தான் தாங்கல் வேணும்! முட்டுக்கால் கொடுத்து நிறுத்தணும். முட்டுக் கால் வேலையை என்னாலே செய்ய முடியாது.'

"எப்படி பண்ணியிருக்கான்?"

"ஓகே...!"

"கிடைச்சுடும் இல்லியா...?"

"ச்சு..." சற்று தொய்ந்தாற்போல் பதில் வந்தது. எங்க கம்பெனியிலே, ஒரு பழக்கம். வந்து... ஏதாவது வேலை காலியானா அந்த இடத்திற்கு இங்கே வேலை செய்கிறவர்களோட வாரிசுக்குத்தான் முன் பாத்தியதை...! எழுதாத சட்டமா இருக்கு! எப்படின்னா அப்பா சீட்டிலே, பிள்ளை உட்கார்ந்துடுவான். யார் ஆரம்பிச்சான்னு தெரியல்லே. எப்பவுமே கெட்ட பழக்கம் 'சட்டு'ன்னு பிடிச்சுக்கும். அதே கதை தான் இங்கேயும்..."

போனை வைத்த பின்பும் ஆச்சரியம் விடவில்லை. நமக்குத் தெரியாத விஷயங்கள் எத்தனையோ இருக்கின்றன. நடக்கின்றன. காலையில், கமலம் சொன்னது போல் டிரைவர் மகன் ஒரு டிரைவர்தானா? கம்ப்யூட்டர் செய்யக் கூடாதா? இதுதான் யுக தர்மமோ? பொருந்துமோ? இந்தச் சங்கிலி அறுபடாதா? கூடாதா?

கடைசியில் கமலம் ஜெயித்து விட்டாள். ஒரு சந்திப்பில், சந்தர்ப்பத்தில் தயாரிப்பாளரின் மனைவியிடம் பேசி, சரிக்கட்டி, டைரக்டர் மகாதேவனை மசிய வைத்து குமாருக்கு வாய்ப்பு வாங்கி விட்டாள்.

முதல் நாள் எல்லோரும் மாங்காடு போனார்கள். அப்படியே ஸ்டுடியோ வந்த போது வாசலில் வழக்கம் போல் கூட்டம்! இன்றும் அந்த இளைஞன் ராமநாதன் தெரிந்தான். இவரைக் கண்டதும் ஓடி வந்தான்.

"சுப்பையா...! வண்டியை நிறுத்து...!"

"எதற்காக?" குமார் முகம் சுளித்தான்.

"இந்தப் பயல்களுக்கு வேற வேலையில்லை...! ஒவ்வொரு கார் பின்னாலும் ஓடிண்டு.. சே..."

"சார், நான் கேட்டேனே...! உங்க அஸிஸ்டெண்டா?"

"நானே ரிடையர் ஆயிடலாம்னு இருக்கேன். இந்த நிலையில் எதுவும் முடியும்னு..."

"முடியும் சார். மனசிலே இடம் இருந்தா..." கையைப் பிடித்தான்; இறைஞ்சினான்.

"ஏய்...! போடா!" என்றான் குமார். கையை ஓங்கினான். "இப்ப போறியா இல்லியா?"

குமார் கீழே இறங்கினான். "வாட்ச்மேன்... வாட்ச்மேன்..." என்று இரைந்தான்.

"சார்...! இந்த ஃபீல்டுலே நீங்க ஒருத்தர்தான் மாறுபட்டவர். திறமைக்கு மதிப்பு கொடுக்கிறவர்னு சொல்றாங்க. உங்க மகனையும் இசையமைப்பாளரா கொண்டு வரீங்க. சந்தோஷம்! நியாயமா கூட இருக்கலாம். ஆனா நீங்கள்ளாம் சேர்ந்து இப்ப புதுசா ஒரு வருணாசிரமத்தை உருவாக்கிட்டீங்க. 'குலக்கல்வி'ன்னு கேலி செஞ்சு அந்தப் பழையதையே அழகா 'வாரிசு'ன்னு சொல்றீங்க. அரசியல் தலைவரோட மகன் ஒரு குட்டித் தலைவர்தான்னு ஆயிடுத்து. அதே மாதிரி நடிகர் மகன் நடிகன். பாடகர் பிள்ளை பாடகன். டாக்டர் மகன் டாக்டர். இது நல்லதுக்கு இல்லே. வளராது. புதுசு புதுசா வராது. தேங்கிப் போயிடும்..."

"தம்பி! யாராக இருந்தாலும் சுயபலம்தான் அஸ்திவாரம்...! அதுதான் நிற்கும். இல்லேன்னா காலப்போக்கில் விழுந்துடும்! சரிஞ்சிடும்!"

"ஆனா... பந்தியிலே இடம் ஒதுக்கிடுறீங்களே. முதல் ஆளா உங்க வாரிசுகள்தானே உட்காருது! அவங்களை கவனிச்சது போக... மிச்சம் இருந்தால்தான் என்னைப் போல் கடைசி ஆள் வரை வரும். அதுவரை ஏழைக்குப் பிறந்தவன் காத்திருக்கணும் பசியோட..."

அழுத்தமும் கனமும் குரலில் ஏற... வாட்ச்மேன் அவன் கையைப் பிடித்து இழுத்து இழுத்து..

குமாரைச் சுற்றி எல்லோரும் உட்கார, டைரக்டர் காட்சியை விவரிக்க ஆரம்பித்தான்.

"தன்னன்னதானே... தன்னன்னதானே... தானே..."

டைரக்டர் எதுவும் சொல்லவில்லை. நெட்டுக்குத்தலாகப் பார்த்தார். அந்தக் கண்களில், புருவச் சுருக்கலில் திருப்தி தெரியவில்லை. 'அடுத்தது வரட்டும்' என்கிற மாதிரி தலையை மட்டும் ஆட்டினார். அடுத்தது, அதற்கும் அடுத்தது...

"உன்கிட்டே நிறையவே எதிர்பார்த்தேன்" என்றார். 'அடாக' என்று முணுமுணுத்தார்.

"இதெல்லாம் நல்லா இல்லியா...?"

"இருக்கு! உன்கிட்டே நிறையவே எதிர்பார்த்தேன்! நீ சின்னப் பையன். யாரும் செய்யாததை செஞ்சு காட்டணும். 'இவனா...'ன்னு கேட்க வைக்கணும். அந்த உந்துதல் வரணும்.

போடு பார்க்கலாம்."

திரும்பவும்... திரும்பத் திரும்ப...

குருமூர்த்தி யோசனையில் இருந்தார். அவர் காதருகில் ஒரு குரல் கேட்டது. விடாமல் ஒலித்தது. வேறு எதையும் கேட்க விடாமல் அடித்தது. 'நீங்கள்ளாம் சேர்ந்து இப்ப புதுசா ஒரு வருணாசிரமத்தை உருவாக்கிட்டீங்க. இது நல்லதுக்கில்லே. வளராது! பந்தியிலே இடம் ஒதுக்கி...'

"என்ன...?" தூக்கத்திலிருந்து விழித்த உணர்வு.

"எல்லாத்துக்கும் இப்ப, சாஃப்ட்வேர் கிடைக்கிறது. டிஸ்கிலே வந்துடுத்து. உன் பையன் அதை அப்படியே கார்பன் காப்பி எடுத்து வைச்சுக்கோன்னு என்கிட்டே கொடுக்கறான். எதையாவது போடச் சொல்லு. கேட்போம்."

மீண்டும் தொடர... ஒரு இடைவெளியில், 'போதும்' என்று குருமூர்த்தி கையை உயர்த்தினார். முகம் இறுகியிருந்தது.

"எத்தனை கேட்டாச்சு? இதற்கு மேலே என்ன? இதிலியே நல்லதா பார்த்து பொறுக்கிக்க..."

டைரக்டர் அயர்ந்துதான் போனார். குருமூர்த்தியிடமிருந்து இப்படி ஒரு பாய்ச்சலை எதிர்பார்க்கவில்லை என்று முகம் சொல்லிற்று!

"இது என்ன...? வெண்டைக்காயா? நுனி ஒடிச்சு பொறுக்க? இஷ்டமிருந்தா நான் சொல்றதை கேட்கணும். இல்லே..."

"ஏய்! மகாதேவா! நீ வேணும்னே விவகாரம் பண்றே! எது நல்லது, எது சப்பைன்னு உனக்கு இன்னும் புரியலே! தெரியலே! இவனை வர விடக்கூடாதுன்னு அமுக்கறே. முளையிலேயே கிள்ளப் பார்க்கிறே. பார்றா... உனக்கு முன்னாடியே இவனைக் கொண்டு வரேன். பிரமாதப்படுத்தறேன். உனக்கு? ஸ்டூடியோ வாசல்ல ராமநாதன் உலகநாதன்னு எவனாவது கிடைப்பான். அட்ரஸ் இல்லாதவன். அவனைக் கூப்பிட்டு போடு! அவன்தான் உனக்கு லாயக்கு."

டைரக்டர் முகத்தில் ஒரு ஒளிக்கீற்று. இந்த நமுட்டுச் சிரிப்பில், கோபத்தில் தனக்கு ஏதோ செய்தி இருப்பது போல் இவ்வளவு வருடங்கள் இல்லாமல் குருமூர்த்தியிடமிருந்து இப்படி ஒன்று! அவரும் நக்கலாக சிரித்தார்.

"போடறேன்... இதற்காகவாவது செஞ்சு காட்டறேன்."

"போட்றா! ஆலை இல்லாத ஊருக்கு ஒரு ராமநாதன்...! உனக்கு ஏத்த மாதிரி 'பேபே'ன்னு ஒத்து ஊதுவான்."

"அவனையே கொண்டு வந்து உன் மூஞ்சியிலே கரியைப் பூசல்லே...!"

"சொல்லாதே? செய் பார்ப்போம்."

வெளியில் வந்தார்கள். சற்று கழித்து ஒரு ஆள் வேகமாக வாசலை நோக்கி விரைவதைப் பார்த்தார்கள்.

"அப்பா...!" குமார், இவரைத் தொட்டுக் காட்டினான். நோட்டுப் புத்தகத்தை இடுக்கிய படி ராமநாதன், அந்த ஆளுடன் உள்ளே வந்து நம்ப முடியாமல் கை, கால்கள் பரபரக்க, வியர்க்க, ஓட்டமும் நடையுமாகக் கடந்து போகிறபோக்கில் ஒரு ஆச்சரியம் கலந்த பரவசத்துடன் இவரைப் பார்த்து வணங்கி...

"நிஜமாவே இவனை இந்தப் படத்திலே போடப் போறாங்க போல் இருக்கு...!" என்றான் குமார்.

பதில் சொல்லவில்லை. சுற்றி வந்து, காரில் ஏறும் சமயம், அந்த நசுங்கல் கண்ணில் பட்டது. கைகளால், அதைப் பற்றி, வலிந்து இழுத்து நிமிர்த்தப் பார்த்தார். அசைய வில்லை. ஒருபெரிய கல்லை எடுத்துத் தட்டினால்....

"ஐயா! இப்படி வேண்டாமுங்க." என்றான் சுப்பையா. "வேகமா ஒரு அடி விழுந்தா இன்னும் மோசமாயிடும். நெளியும்! விரியும். சில சமயம் உடைஞ்சிடும். நசுங்கல் என்னமோ அரை நொடியில் வந்துடுத்து. எடுக்கறப்ப... நேராக்கிறப்ப... பொறுமை வேணும். நிதானம் வேணும். மெதுவா... மெதுவா.. மரச்சுத்தியாலே மாத்தி மாத்தி தட்டிக்கிட்டே இருக்கணும். தட்டத் தட்டத்தான் நிமிரும். கொஞ்சம் கொஞ்சமாக சரியாயிடும். என்ன? நேரம் பிடிக்கும்...!"

பிடிக்கட்டும்.

---



புகழ் பெற்ற எழுத்து வேந்தரான ஜின்காக்டு என்பவரிடம் அவர் நண்பர் கேட்டார்: 'அதிர்ஷ்டத்தை நீங்கள் நம்புகிறீர்களா?' எழுத்தாளர் பதில் சொன்னார் : 'நிச்சயமாக நம்புகிறேன். நமக்கு வேண்டாதவர்கள் அடையும் வெற்றிக்கு அதைத் தவிர வேறு என்ன காரணத்தைச் சொல்ல முடியும்!'

— எஸ். ராஜகோபாலன்



# நம்பிக்கை தரும் ஆட்சி!

ஒரு மோசமான, ஊழல் நிறைந்த நிர்வாகத்திற்குப் பின், பொறுப்பு ஏற்கும் முதல்வருக்குச் சற்றே சுமை கூடத்தான். அப்படியும், கலைஞர் தேர்ந்தெடுத்திருக்கிற உயர் அதிகாரிகளை வைத்தே அவருடைய ஆட்சி முறை எப்படி இருக்கும் என்பதை ஊகிக்க முடியும். அந்த அடிப்படையில் பார்க்கப் போனால், முதலமைச்சரின் அலுவலக அதிகாரிகள், தலைமைச் செயலாளர் முதல், மற்ற முக்கியத் துறை அதிகாரிகள் மற்றும் காவல் துறை அதிகாரிகள் ஆகியோரின் நியமனங்கள் கலைஞர் நல்ல நிர்வாகத்தைத் தருவார் என்ற நம்பிக்கையை ஊட்டுகின்றன. கடந்த ஆட்சியில், 'வசூல் மன்னர்களுக்குத்'தான் முக்கியப் பொறுப்புக்கள் கொடுக்கப்பட்டது என்பதையும் நினைத்துப் பார்க்க வேண்டும்.

கடந்த ஆட்சியில் எரிச்சலூட்டக்கூடிய அளவில் இருந்த ஊதாரித்தனம், பகட்டு, படாடோபம் இவையெல்லாம் காணாமல் போய் விட்டது, சாதாரண மக்களுக்கு ஆறுதல் அளிக்கும் விஷயம். முதல்வரின் பின்னால் ஆயிரம் கார் பவனி கிடையாது. அவர் செல்லும்போது போக்குவரத்து தடை கிடையாது. கட்-அவுட்டுக்கு கெட்-அவுட் சொல்லியிருக்கிறார் கலைஞர். எளிமை எங்கும் தெரிகிறது. நான் கேள்விப்பட்ட வரையில் அநாவசியமாக சுற்றுலாக்கள் சென்று அரசுக்குச் செலவு வைக்க வேண்டாம் என்று கூட கலைஞர் அமைச்சர்களுக்குச் சொல்லியிருக்கிறார்! பிறந்த நாள் கொண்டாட்டத்தை அடக்கமாக வைத்துக் கொண்டு 'மரம் நடச் சொன்னது' வரவேற்கத்தக்க விஷயம். பதவி ஏற்பின்போது, மிகக் குறைந்த வயதுடைய அமைச்சர்களைக் கூட காலில் விழ அனுமதிக்காததன் மூலம், காலில் விழும் கலாச்சாரத்திற்கு விடை கொடுத்து அனுப்பியவர் கலைஞர் என்று சந்தோஷம் உண்டாகிறது.

சட்டம்-ஒழுங்கைப் பொறுத்தவரையில் எங்கேயும் கொலையோ, கொள்ளையோ அல்லது வன்முறைச் சம்பவங்களோ நிகழாமலேயே இருந்து வரும் என்று எந்த நாட்டிலும் எதிர்பார்க்க முடியாது. ஆனால் அப்படிப்பட்ட வன்முறைச் சம்பவங்கள், சட்ட மீறல்கள் நடக்கும்போது ஒரு அரசு, அதன் மீது எப்படி நடவடிக்கை எடுக்கிறது, வன்முறை வளராமல் எப்படித் தடுக்கிறது என்பதைப் பார்க்க வேண்டும். அந்த வகையில் சட்டம் ஒழுங்கைப் பராமரிக்கும் விஷயத்தில் இது

## த.மா.கா. எம்.எல்.ஏ. சொக்கர் விமர்சிக்கிறார்

வரை திருப்தியான நிலை இருக்கிறது. குறிப்பாகச் சொல்ல வேண்டுமென்றால் தேர்தல் முடிவுகள் வெளிவந்த நேரத்தில் துவங்கிய தூத்துக்குடி இனக்கலவரத்தை மேலும் அதிக அளவில் பரவாமல் தடுத்து அமைதி ஏற்படுத்த, அமைச்சர்கள் ஆலடிஅருணாவையும், ஜெனி பர்சந்திரனையும் அனுப்பியது. சென்னை நகரைக் கலங்கடித்துக் கொண்டிருந்த ரவுடிக் கூட்டத்தை ஒழித்துக் கட்டியது. ஆனால் சட்டமன்றத்தில் பேசும்போது "போலீஸ் துறை எழுபத்தைந்து சதவீதம் கெட்டுப் போய் விட்டது" என்று சொன்னதை மட்டும் அவர் தவிர்த்திருக்கலாம்!

நான் நம்பினாலும் கூட, விடுதலைப் புலிகள் விஷயத்தில் எச்சரிக்கையோடு செயல்பட வேண்டும்.

ஆட்சிப் பொறுப்பை ஏற்றவுடன் தரை வரி, கூரை வரி ஆகியவற்றை எடுத்து கிராமத்து மக்களிடம் நல்ல பெயரைத் தட்டிக் கொண்டார் கலைஞர். அரசுக்கு வர வேண்டிய வருவாய், போயஸ் தோட்டத்துக்குப் போய்க் கொண்டிருந்ததைக்



• சொக்கர்

கண்டுபிடித்து, சரிசெய்தார். குறிப்பாகச் சொல்வதென்றால் Vend fee என்னும் மதுவிலக்கு ஆயத்தீர்வை கோடிக்கணக்கில் அரசு கஜானாவுக்குக் கூடுதலாக வர வழி செய்யப்பட்டது. எனக்குத் தெரிந்தவரை சென்ற ஆட்சியில் கப்பம் கட்டி சலுகைகள் பெற்று வந்த சில தொழிலதிபர்கள், அதே நிலை தொடர இப்போதைய ஆட்சியாளர்களைச் சந்தித்தபோது கண்டிப்பு காட்டப்பட்டு திருப்பி அனுப்பப்பட்டார்கள். ஊழல் குற்றச்சாட்டு, இதுவரை இந்த அரசு மீது கூறப்படவில்லை என்பது மிகவும் ஆறுதலான விஷயம்.

ஆனால் நிர்வாகத்தில் கீழ் மட்டத்தில்

கலைஞர் அரசு பொறுப்புக்கு வந்தவுடன் விடுதலைப் புலிகளின் நடமாட்டங்கள் கூடி விட்டது என்றோ, குறைந்து விட்டது என்றோ ஒன்றும் சொல்வதற்கில்லை. இருந்தாலும் விடுதலைப் புலிகளுக்கு ஆதரவாக உள்ள சிலர் அவர்களுக்கு சாதகமான அரசு தமிழகத்தில் வந்து விட்டதாகக் கூறி கடிதங்களையும் துண்டுப் பிரசுரங்களையும் விநியோகித்து வருகிறார்கள். இந்த அரசுக்கு அதுபோன்ற அமைப்புகளோடு, நிச்சயம் தொடர்பு இருக்காது என்று




கட்சிக்காரர்கள் தலையீடு இருக்கிறது. அந்தத் தலையீடு ஆட்சிக்கு அவப்பெயரைத் தேடித் தராமல் பார்த்துக் கொள்ள வேண்டிய பொறுப்பு கலைஞருக்கு இருக்கிறது.

கலைஞரின் முதல் பட்ஜெட் வரவேற்கப் பட வேண்டியது தான். குறிப்பாகப் பருப்பு, தானிய வகைகளுக்குப் பலமுனை வரி இருந்ததை ரத்து செய்து, ஒரு முனையாக மாற்றிய தன் மூலம், ஏறிக் கொண்டிருந்த விலைவாசி ஓரளவு கட்டுப்படுத்தப்பட்டது. காஸ் சிலிண்டர் விலையை மத்திய அரசு ஏற்றியதால் அதிருப்தியாக இருந்த மத்திய தர மக்கள் தமிழக அரசின் வரிக் குறைப்பு மூலம் சிலிண்டர் விலை சிறிது குறைந்தது கண்டு ஆறுதல் அடைந்திருப்பார்கள். சென்னைக்கு அருகே கார் தொழிற்சாலை அமைய, கொரிய நாட்டு கம்பெனியுடன் செய்து கொண்ட ஏற்பாடு தொழில் வளர்ச்சியிலும் அரசு சுணக்கம் காட்டாது என்பதைத் தெரிவிக்கிறது.

காவிரிப் பிரச்னை கலைஞர் அரசுக்கு சங்கடத்தைத் தோற்றுவித்தது. ஆனால் அவர் கையாண்ட அணுகுமுறை, திருப்திகரமாக இருக்கிறது. மதுவிலக்கு பிரச்சாரத்திற்கு 25000 பெண்கள் மாநிலம் முழுவதும் நியமிக்கப்படுவார்கள் என்ற அறிவிப்பை ஒரு சிலரைத் தவிர மற்றவர்கள் எதிர்த்துப் பேசினார்கள். சில ஆளும் கட்சி உறுப்பினர்களும் எதிர்த்தார்கள் என்பது என் நினைவு. ஆனால் 'சாராயப் பானையில் குண்டுகள் பாயும்' என்று சொன்னதன் மூலம் மதுவிலக்கில் உள்ள நம்பிக்கையினை சொல்லியிருக்கிறது அரசு. கிருஷ்ணா நீரை சென்னைக்கு விரைவில் கொண்டு வர எடுக்கப்படும் நடவடிக்கைகள் பாராட்ட வைக்கின்றன.

சட்டமன்றத்தில் ஜனநாயகக் காற்று வீசுகிறது. வாதமும் எதிர்வாதமும் செய்வதை ஒரு கலையாகக் கொண்ட கலைஞர், கடுமையான விமர்சனங்களைச் செய்ய அனுமதித்து, அதற்குரிய விதத்தில் பதிலளிக்கும் முறையால் சபை நடவடிக்கைகளில் களை கூடுகிறது.

கடந்த காலத்தில் சபாநாயகர், முதல்வரின் காலில் விழுந்து, அவர் கண் ஜாடைக்குச் செயல்பட்டு அவை மரபுகளை ஆழக் குழி தோண்டிப் புதைத்தார். ஆனால் தற்போதைய சபாநாயகர், பல சந்தர்ப்பங்களில் முதலமைச்சரே சொல்லியும் கூட அவர் சொல்லுக்குக் கட்டுப்படாமல் தமக்கு எது சரியோ அதைச் செய்து வருகிறார்! 'நான் ஒரு அடங்காத பிள்ளை என்று தெரிந்திருந்தும், எனக்குக் கலைஞர் இந்த பொறுப்பை கொடுத்திருக்கிறார்' என்று சற்றுக் கிண்டலுடன் அவையிலேயே சொன்னார் சபாநாயகர்!

கலைஞரே கூட சபாநாயகருக்கு உரிய மரியாதை கொடுத்து, பல நேரங்களில் எழுந்து அவரது இருக்கைக்கே சென்று ஆலோசனை கேட்பதை அடிக்கடி பார்க்க முடிகிறது! மாற்றுக் கட்சிக்காரர்களின் கருத்துக்கு முழு மதிப்புக் கொடுத்துக் கேட்கிறார்கள். அதே நேரத்தில் குறும்புக்கும், நகைச்சுவைக்கும் பஞ்சமே இல்லை! கரும்பு விவசாயிகளுக்கு மானியம் உயர்த்தப்படுமா என்று ஸ்டாலின் கேட்ட போது, 'மகனே கேட்டாலும் மானியத்தை உயர்த்த முடியாது' என்று சொன்ன பதிலால் அவையில் கிண்டலலை!

சென்ற ஆட்சியின்போது செய்யப்பட்ட தவறுகளுக்கும் ஊழல்களுக்கும் காரணமானவர்கள் மீது நடவடிக்கை எடுக்கப்படும் அதே சமயத்தில் 'பழிவாங்கும் நடவடிக்கை இருக்காது' என்றார் முதல்வர். அதே சமயம் ஜெ.மீதும், மற்ற அ.தி.மு.க. அமைச்சர்கள் மீது எடுக்கப்படும் நடவடிக்கைகள் துரிதப்படுத்தப்பட வேண்டும் என்ற கருத்தும் பரவலாக இருக்கிறது. சட்ட நுணுக்கங்களை ஆராய்ந்து, குற்றவாளிகள் நீதிமன்ற விசாரணையின் போது தப்பி விடாமல் இருக்கக்கூடிய அளவில் குற்றப்பத்திரிகை தாக்கல் செய்யப்பட வேண்டும் என்பதால் ஏற்படக்கூடிய தாமதம் இயற்கையானதுதான். அதனால் எல்லா துறையிலும் கோடிக்கணக்கான ரூபாய் ஊழல் நடந்துள்ள நிலையில், வழக்குகளின் எண்ணிக்கையும் அதிகமாகிக் கொண்டே போகிறது.

எனினும் இதுவரை அரசு எடுத்துள்ள நடவடிக்கைகளைப் பார்க்கும்போது தவறு செய்தவர்கள் தப்ப முடியாது என்ற நம்பிக்கை உண்டாகிறது.

தொகுப்பு: ப்ரியன்

வண்ணப்படம்: பேஜர் கே. மூர்த்தி

# ஆப்பிள் வரம்

'இன்று பெய்தால்தான் ஆச்சு' என்று அடம் பிடித்தபடி கொட்டோ கொட்டென்று கொட்டியது மழை.

தீப்பெட்டியை ஞாபகப்படுத்தும் தன் வீட்டின் வாயிலருகே அமர்ந்தபடி, வெளியே மழையின் வீச்சை அளந்து கொண்டிருந்தார் டிரைவர் பாலு.

அவரருகே தன் செல்ல நாய்க் குட்டியைக் கட்டியணைத்தபடி நின்றிருந்தான் எட்டு வயது சக்கரவர்த்தி.

அவனுக்கு அந்தப் பெயரைச் சூட்டியவர் பெரிய தீர்க்கதரிசியாக இருக்க வேண்டும். அவன் பிறந்த நாளிலிருந்து அவனுடைய தந்தையின் தங்க நகை வியாபாரம் சூடு பிடித்து, ஜுவாலையாகி, இன்று ஒற்றைச் சூரியனாய் ஒளி விட்டுக் கொண்டிருக்கிறது.

அவர் கடையைச் சுற்றித்தான் உலகமே சுற்றுவதைப் போன்ற பிரமையை ஏற்படுத்தும் அளவிற்குக் கூட்டம்.

கோடிகளையெல்லாம் எப்போதோ கடந்து விட்டவரின் ஒரே வாரிசான சக்கரவர்த்தி, வெளியே காற்று வாங்க, டிரைவர் பாலுவோடு நடந்து வந்த போதுதான் அந்த அசுர மழை பிடித்துக் கொண்டது.

வேறு வழி தெரியாமல், தன் சின்ன முதலாளியை அருகேயிருந்த தன் வீட்டிற்கு அழைத்து வந்திருந்தார் பாலு.

தன்னுடைய சொற்ப சம்பாத்யத்தில் இரண்டு தங்கைகளுக்கு அவர் திருமணம் செய்து கொடுத்திருக்கிறார் என்ற செய்தியிலிருந்தே அந்த வீட்டில், வரட்சிக்கு எத்தனை அதிகாரமும் ஆளுமையும் இருக்கும் என்பது புரியும்.

கடமைகளை முடித்து, அவர் மணம் செய்து கொண்டு, பின் பிறந்த மக

வேதா

னுக்கு மூன்று வயதான அந்த நிலையிலும் அவருடைய பொருளாதார நிலை முன்னேறவில்லை.

"என்ன டிரைவர்? உம்முனு உட்கார்ந் திருக்கீங்க? எனக்குப் போரடிக்குது."

"மழை விட்டதும் கிளம்பிடுவோம் தம்பி. நீ என் வீட்டுக்கு வந்தது எனக்கு எவ்ளோ பெருமை தெரியுமா? எனக்கு ரொம்ப சந்தோஷம். இப்ப என் பையன் வந்துடுவான். குட்டிப் பையன். அது வரைக்கும் ஜிம்மியோடு விளையாடு. உனக்கு போரடிக்காது."

"ரொம்ப குட்டிப் பையனா? அப்ப ஜாலி."

வாழ்க்கைப் பிரச்னைகள் அவரை கழுகாய் வட்டமிட்டபோது, அவருக்கு வேலை போட்டுக் கொடுத்து, அந்தக் குடும்பத்தைக் காப்பாற்றியவர் முதலாளி.

முதலாளியைப் பற்றி நினைக்கும் போதெல்லாம் அந்த நாளும் நினைவில் வந்து நின்றது.

"என்ன பாலு? எப்பக் கல்யாணம் பண்ணிக்கப் போறே?"

"ஐயா, எனக்கு மூணு தங்கச்சி, மூணுமே கல்யாண வயசுல...!"

"அடப்பாவமே! இப்பவே உனக்கு முப்பது வயசாச்சே?"

"என்னைப் பத்தி ஒண்ணுமில்ல முதலாளி. என் கவலையெல்லாம் என் தங்கச்சிங்களப் பத்தித்தான்."

நெற்றி சுருங்க யோசித்த முதலாளி, தீர்மானமாகச் சொன்னார்.

"கவலைய விடு பாலு. மொத்தமா கணக்கு பண்ணிச் சொல்லு. உன் மூணு தங்கச்சிகளோட கல்யாணத்தையும் ஒரே பந்தல்ல முடிச்சிடுவோம். எவ்வளவு பணம் வேணும்னு சொன்னா மொத்தமா குடுத்துடறேன்."

"முதலாளி...!"

"யோசிக்காத பாலு. இது கடன்தான். மாசா மாசம் ஒரு தொகையை உன் சம்பளத்தில புடிச்சு கடனைத் தீத்துடலாம். சரிதானே?"

வியாபாரத்தோடு சேர்ந்த பண உருட்டல் உத்தியாக இருக்கலாம். ஆனால் காலத்தால், முதலாளி செய்த அந்த உதவியை ஒவ்வொரு நிமிடமும் நினைத்து தன் விசுவாசத்தை, சுவாசமாக்கி இருந்தார் பாலு.

மாதா மாதம் பிடித்தம் போக மிஞ்சிய வருமானத்தை வைத்து, அந்தக் குடும்பத்தின் அத்தியாவசிய, அடிப்படைத் தேவைகளைக் கூடப் பூர்த்தி செய்வது கஷ்டமாக இருந்தது.

அடுத்த வருடம் அவருடைய மகன் முத்துவைப் பள்ளியில் சேர்க்க வேண்டும்.

அந்தக் காரணத்தால், அன்றாட உணவிலும் அவர் குடும்பம் சில தியாகங்களைச் செய்ய வேண்டியிருந்தது.

"என்ன டிரைவர்? உங்க பாப்பாவை எங்க காணும்?"

தன் பெயருக்கேற்றாற்போல் தோரணையாகக் கேட்டான் சக்கரவர்த்தி.

"அவங்க அம்மாதான் எங்கயோ வெளியே கூட்டிட்டுப் போயிருப்பா. மழைக்காக எங்கயாவது ஒதுங்கியிருப்பாங்கன்னு நினைக்



புதுயுகன்

கறேன்."

அவர் வாய் முணுமுணுக்க, கண்கள் வாசலைத் துழாவின.

தன் வீட்டுக்கு முதல்முறையாக வந்திருக்கும் சக்கரவர்த்திக்கு ஏதாவது சாப்பிடக் கொடுக்க வேண்டும் என்று அவர் மனம் ஆசைப்பட்டது. மனைவி திரும்பினால் வசதியாக இருக்கும்.

அவருடைய எண்ணத்திற்கு பதிலுரைப் பதைப்போல, கொட்டும் மழையில் நனைந்தபடி ஓட்டமும் நடையுமாக ஓடி வந்து கொண்டிருந்தாள் அவர் மனைவி.

அவள் கையிலிருந்த முத்துவை வாங்கிக் கொண்டபடி 'என்ன இப்டி வரீங்க? அது சரி, யார் வந்திருக்கா பாரு'' அவர் அறிமுகம் செய்து வைக்க, தலை துவட்டுவதை விட்டு, கண்கள் விரிய ஆச்சரியமாய்ப் பார்த்தாள் அவள்.

மறுகணம், கணவனின் பார்வையிலேயே அவர் மனத்தைப் புரிந்து கொண்டவள், அவசரமாக உட்புறமாக ஓடினாள்.

கையில் முத்துவோடு, அவளைத் தொடர்ந்தவர் அடுக்களைக்குச் சென்றதும் சோர்ந்து போனார். கொஞ்சம் பழைய சோறும், குழம்புமே அங்கு இருந்தன.

எரிச்சலோடு திரும்பியவரின் கண்களில் முத்துவின் கையிலிருந்த அழகான ஆப்பிள் பட்டது.

அவருக்கு அப்போதுதான் புரிந்தது. அந்த ஆப்பிள், முத்துவின் பலநாள் தவத்தின் வரம். சீசனில்லாத நேரத்து அந்த ஆப்பிள் பாலுவின் ஒரு வார கால சாதனை.

அவரைப் பார்த்தபடி அருகே வந்த மனைவி, முத்துவை வாஞ்சையோடு தடவினாள்.

"கண்ணா, உனக்கு அப்புறமா இன்னொரு ஆப்பிள் வாங்கித் தரேன். இதக் குடுக்கிறயா?"

மின்சாரம் தாக்கியதைப் போல், கையை பின்னுக்கிழுத்துக் கொண்டது குழந்தை.

"சொன்னா கேக்கணும்ப்பா. வெளிய, அண்ணனுக்கு குடுக்கணும்ல? நம்ம வீட்டுக்கு வந்திருக்காங்க பாரு."

ஆதரவுக்காகத் தன் தந்தையைப் பார்த்தவன், அது கிடைக்காததால் வேறு வழியின்றி, தன் பொக்கிஷத்தைப் பண்டமாற்றி ஒரு முத்தத்தைப் பெற்றுக் கொண்டான்.

வெளியே வந்தவர்கள், முத்துவை, சக்கரவர்த்தியிடம் விளையாட விட்டனர்.

"தம்பி, எங்க வீட்டுக்கு முதல் தடவையா வந்துருக்கே. இந்த ஆப்பிளைச் சாப்பிடுப்பா. கட் பண்ணி தரச் சொல்லவா?"

"வேணாம், நான் அப்படியே சாப்பிடுவேன். தேங்க் யூ."

முத்துவோடும் நாய்க்குட்டியோடும் விளையாடியபடியே ஆப்பிளைக் கடித்தவன், மறுகணம் அந்தப் பழத்தைத் தன் செல்ல நாய்க்குட்டிக்குக் கொடுத்தான்.

"என்னைவிட, இந்த ஜிம்மிக்குத்தான் ஆப்பிள் ரொம்பப் பிடிக்கும்."

அந்த ஜீவன் இரண்டு முறை பழத்தை கவ்வி சின்னாபின்னப்படுத்தியபடி, காலால் உதைத்து வெளியே மழையில் தள்ளியது.

தன்னிச்சையாய், அதை எடுக்க வெளியே ஓடிய முத்துவை நிறுத்தினான் சக்கரவர்த்தி.

"சீ! அசிங்கம்! அதைப்போய் யாராவது எடுப்பாங்களா? எங்க வீட்டுக்கு வா, பாப்பா. உனக்கு நெறைய ஆப்பிள் குடுக்கறேன்."

முத்து ஓடிப் போய், தன் தாய் மீது ஏறிக் கொண்டான். நடந்த நிகழ்ச்சியில் நிலை குலைந்து போயிருந்தவளால், தன் மகனை சமாதானப்படுத்த முடியவில்லை.

அவளையும் குழந்தையையும் வெறுமையாகப் பார்த்தார் பாலு.

"மழை விடப் போகுதே டிரைவர்... போவோமா?"

அவருடைய நெஞ்சில் அப்போதுதான் மழை ஆரம்பமாகியிருந்தது.

அவர் பாலுவின் கைகளைப் பிடித்துக் கொண்டு வெளியே வந்தார்.

சிதைந்து கிடந்த ஆப்பிள் துண்டை கால் பந்தாடியபடி நடந்தான் சக்கரவர்த்தி.

அவனிடமும் குற்றமில்லை.

அவனைப் பொறுத்தவரை அந்த ஆப்பிள், 'சிவப்பு நிறத்திலிருக்கும் இனிப்பான ஒரு பழம்'. அவ்வளவுதான்.

பாலு நடந்தபடியே வெறுமையாகச் சாலையைப் பார்த்தார். அங்கே சில சிறுவர்கள் 'பச்சைக்குதிரை' விளையாடிக் கொண்டிருந்தார்கள்.

தன் நண்பர்கள் தாண்டிக் குதித்து விளையாட ஒருவன் குனிய வேண்டியிருந்தது. அவன் குனிந்தால் தான் மற்றவர்கள் தாண்ட முடியும். எல்லோரும் தாண்டி முடிந்ததும் குனிந்திருந்தவன் நிமிர்ந்தான்.

"டேய், இப்ப வேற யாராவது குனிங்கடா, நான் தாண்டறேன்."

குனியும் கட்டம் முடிந்து அவனுக்குத் தாண்டும் கட்டம் வந்தது.

பாலுவிற்குப் புரிந்தது. அவர் மென்மையாக முறுவலித்தார். அந்த முறுவலுக்குள் ஒரு பெரிய நம்பிக்கை அலை, சப்தம் போடாமல் ஒளிந்து கொண்டிருந்தது.

# KALKI SHOPPING PAGE

**பொ**றுமையே உருவானவள் பூமிபிராட்டி. நாம் எவ்வளவுதான் தப்பு பண்ணினாலும் அதை பகவானிடத்திலே சொல்ல மாட்டாளாம்! நாம் ஒரு துளி நல்லது செய்தால் கூட அதைப் பெரிசுபடுத்தி அவனிடத்திலே சொல்வாளாம்! அவ்வளவு காருண்யம் நம்மிடத்திலே அவளுக்கு!

எம்பெருமான் அந்த பூமாதாவைத் திரும்பிப் பார்த்தான். "இந்த மஹாலக்ஷ்மி சொன்னதையெல்லாம் நீயும் கேட்டாய். இப்போது நீ போய் கீதாசாரத்தை எடுத்துச் சொல்லி, உலகத்திலே உள்ளவர்களைத் திருத்துவாயா...?" என்று கேட்டான்.

''அதற்குத்தானே காத்துக் கொண்டு உட்கார்ந்திருக்கிறேன் சுவாமி!'' என்றாளாம் பூமாதா!

மஹாலக்ஷ்மி முடியாது என்று சொன்ன பொறுப்பை பூமாதா உடனே ஏற்றுக் கொண்டு விட்டாள்.

"நீங்கள் என்னைப் போகச் சொல்வீர்கள் என்று எதிர்பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருக்கேன்'' என்று முந்தானையிலே போட்ட முடிச்சோடு

# குறை

சொல்கிறாளாம்!

எப்போது போட்ட முடிச்சு அது...? வராஹ அவதாரத்திலே, வராஹத்தின் மூக்கின் மேலே உட்கார்ந்திருந்தபோது, அவன் (பகவான்) சொன்ன மூன்று கட்டளைகளுக்காகப் போட்ட மூன்று முடிச்சுகள்...

- அவன் திருவடியிலே புஷ்பத்தை இட்டு அர்ச்சனை செய்ய வேண்டும்;
- அவன் திருநாமத்தை உரக்க சொல்ல வேண்டும்;
- அவன் திருவடியிலே ஆத்ம சமர்ப்பணம் பண்ண வேண்டும்

என்ற மூன்று கட்டளைகளுக்காகப் போட்ட மூன்று முடிச்சுக்கள்.

"இப்போதே நீங்கள் போகச் சொன்னாலும் சித்தமாயிருக்கிறேன்'' என்றாள் பூதேவி.

"எங்கே போவாய்? யாரிடம் பிறப்பாய்?'' என்றார் பகவான்.

''உங்களுடைய அனுக்கிரஹம் உதவும்'' என்று புறப்பட்டு விட்டாள் தேவி. விஷ்ணுசித்தரின் மகளாய் வந்து அவதரித்தாள். நம்

திராவிட தேசத்துக்கே அந்த அவதாரம் பெருமை சேர்த்தது.

கல்பத்தின் ஆதியிலே கேட்ட வராஹ மூர்த்தியினுடை வாக்கைத் தானே எடுத்துக் காட்டவேண்டும் என்பதற்காக துளசி கான கத்திலே அவதரித்தாள் பூதேவி. பிறக்கும் போதே மேன்மையுடையவளாய், சுவா சனையுடன் ஆவிர்பவித்தாள். இரு மாலை கட்டினாள் – ஒரு மாலை பாமாலை; ஒரு மாலை பூமாலை. ஒன்றைப் பாடி சமர்ப் பித்தாள்; மற்றதைச் சூடி சமர்ப்பித்தாள். சூடிக் கொடுத்த நாச்சியார் என்று பெயர் பெற்றாள்.

திருப்பாவை முப்பது பாசுரங்கள் பாடி னாள் ஆண்டாள். அவற்றில் முதல் பத்து, 'அவன் திருநாமத்தைச் சொல்லு' என்று உணர்த்துகின்றன. இரண்டாவது பத்து, 'உயர்ந்ததான அவன் திருவடியை அர்ச்சனை பண்ணிப் பாரு' என்கின்ற பாசுரங்கள். மூன் றாவது பத்தோ 'அவன் திருவடியிலே ஆத்ம

திரிவிக்கிரமனைத் துதிக்கிறாள் ஆண்டாள் என்பதை கவனிக்க வேண்டும்.

'ஓங்கி உலகளந்த உத்தமன்' என்று முதல் பத்திலே திரிவிக்கிரமனை நினைக்கிறாள்.

'அம்பர மூடறுத்து ஓங்கி உலகளந்த... என்று அடுத்த பதினொன்று முதல் இருபது வரையிலான பாசுரத்துக்குள்ளே இரண்டா வது முறையாக திரிவிக்கிரமாவதாரத்தைப் பாடுகிறாள்.

'அன்று இவ்வுலகம் அளந்தாய் அடி போற்றி' என்று மறுபடியும், இருபத்தொன்று முதல் முப்பது வரையிலான பாசுரங்களுக் குள்ளே மறுபடியும் திரிவிக்கிரமன் திருவடி களைப் போற்றுகிறாள்.

ஆகையினாலே, திருப்பாவை ஒரு வேள்வி போன்றது. ஆண்டாள் நமக்கு கீதையின் வழியைக் காட்டி, நாமம் ஆயிரம் ஏத்த நின்ற நாராயணா! என்று ஆச்ரயித்து, அவனையே திருக்கல்யாணமும் பண்ணிக் கொண்டாள்.

# பான்றுமில்லை

சமர்ப்பணம் பண்ணு' என்று சொல்கின்றன! ஆக, வராஹ மூர்த்தியினிடத்திலே அன்று கேட்ட மூன்று விஷயங்களை முப்பது பாசு ரங்களாய்ப் பாடி ஆண்டாள் அவதாரத்திலே எடுத்துக் காட்டினாள்.

திருப்பாவை என்பது ஒரு நூல் மட்டு மல்ல... அது ஒரு யக்ஞம் (யாகம்). ஆண்டாள் பண்ணிய வேள்வி அது. வராஹ மூர்த்தியி னிடத்திலே பெற்ற உபதேசத்தைக் கொண்டு தனு (மார்கழி) மாசத்திலே ஒரு வேள்வி வளர்க் கிறாள்.

வேள்வி – யக்ஞம் செய்வதற்கு கபாலம் என்றொரு பாத்திர சாதனம் உண்டு. அதிலே நெய்யைத் தடவி சமர்ப்பிப்பார்கள். ஆண் டாள் பண்ணிய திருப்பாவையின் மூன்று பத்தும் மூன்று கபால சாதங்கள் என்றே சொல்லலாம். ஆசார்ய அனுக்கிரஹம் என்கிற நெய்யினால் தடவி அதைச் சமர்ப்பிக்கிறாள்.

யக்ஞம் பண்ணும்போது ஒவ்வொரு கபாலத்தைச் சமர்ப்பிக்கும்போதும் திரிவிக் கிரமாவதாரனான எம்பெருமானை ஸ்தோத் திரம் பண்ணி சமர்ப்பிப்பது மரபு.

திருப்பாவையின் மூன்று பத்தும் மூன்று கபாலங்கள் என் றேன் இல்லையா...? ஒவ்வொரு கபாலத்தின் தொடக்கத்திலும்

ஆண்டாள் அழைத்தாள் என்று வந்து குதித்த பெருமான், ஸ்ரீவில்லிபுத்தூரிலே மடிந்த திருவடியோடு காட்சி தருகிறான்!

பெரியாழ்வாரோ, கன்னிகாதானம் செய்து கொடுத்துவிட்டு அழுகிறார்! 'ஒரு பெண் ணைப் பெற்றேன்... அவளைச் செங்கண்மால் கொண்டு போனான்.... நான் என்ன பண் ணுவேன்...' என்று அவருக்கு வேதனை.

ஆனால் ஆண்டாள் சேர வேண்டிய இடத்தில் சேர்ந்தாள். அப்படிச் சேர்ந்ததில் நமக்கெல்லாம் ஒரு வழிகாட்டல் இருக்கிறது.

வராஹமூர்த்தி சொன்னதை அனுசரித்து அவள் அவனை அடைந்ததுபோல, நாமும் அவனை அடையாலம் – 'அவன் நமக்குப் பதி... நாம் அவனுக்குப் பத்னி' என்ற பாவத்துடன் உத்தமமான சரணாகதி மார்க்கத்தைக் கடைப் பிடித்தோமானால், நாமும் அவனை அடைய லாம்.

சரணாகதி மார்க்கத்துக்கு மூலமானவன் மஹா வராஹ மூர்த்தி – மஹா வராஹ : விச் வாத்மா!

இந்த வராஹ அவதாரத்திலே பகவானு

**முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்**

டைய பூர்ணத்துவம் பேசப்படுகிறது; சரணா கதி மார்க்கமும் பக்தி மார்க்கமும் உணர்த் தப்படுகின்றன. அவற்றுக்கெல்லாம் மேலாக, மிக உயர்ந்ததான யக்ஞப் பிரகடனங்களை யெல்லாம் இந்த அவதாரத்திலே காட்டி நின்றான் பகவான். அதனால்தான் இந்த அவதாரத்தை 'விச்வாத்மா' என்றழைத்தது.

எத்தனை யக்ஞங்கள் உண்டோ அத்தனை யக்ஞங்களையும் தன் திருமேனியிலே காட்டி னான் – வராஹ அவதாரத்தின் போது. நான்கு வேதங்களும் நான்கு கால்களாக அவன் நின்றான். எனவே வேதத்தின் பெருமையை இந்த அவதாரத்திலே காட்டியதுபோல் வேறு எந்த அவதாரத்திலேயும் காட்டவில்லை.

அழியாத பிரமாணம் கொண்டது வேதம். 'ஓலைபடா கிளவி!' என்று சொல்லப் படுவது. ஓலையிலே எழுதிவைத்துப் பாது காக்க முடியாதது. உச்சரித்துத்தான் சொல்லித் தர வேண்டும்; கற்றுக் கொள்ள வேண்டும்.

ராஜமுந்திரியிலே ஜகந்நாத கனபாடிகள் என்பவர். ஒரு மாணவனுக்கு வேதம் சொல்லித் தர வேண்டிய நிர்ப்பந்தம் அவருக்கு. ஒரு குறிப்பிட்ட கட்டத்திலே 'த்ஸ¬' என்கிற ஒலி நிறைய வர, அதை அவனால் திருப்பிச் சொல்ல முடியவில்லை. மாணவனை வீட் டுக்கு அனுப்பி விட்டார்! ஒருநாள் வீதியிலே மாணவன் சைக்கிளைத் தள்ளியபடி வந்தான். பார்த்தார் கனபாடிகள்.

"சைக்கிள் டயரிலிருந்து காற்றைப் பிடுங்கு" என்றார்.

"எதுக்கு...?" என்று விழித்தான்.

"நீ எடுத்துவிடேன் சொல்றேன்..." என்றார்.

அப்படியே அவன் காற்றைப் பிடுங்கவும் 'த்ஸ¬... த்ஸ¬...' என்ற ஒலியோடு அது வெளி யேறியது.

"இப்படித்தான் உச்சரிக்கணும்!" என்று அந்த ஒலியையே உதாரணமாகச் சொன்னார் கனபாடிகள்!

"குருவே!" என்று விழுந்து சேவித்தான் மாணவன்.

"எதற்கு என்னைச் சேவிக்கிறாய்? சைக்கிளைத்தான் நீ விழுந்து சேவிக்கணும்!" என்றாராம் குரு!

வேத உச்சாரணம் எத்தனை கஷ்டமானது என்று உணர்த்த இந்தக் கதை.

வேதங்களிலே நான்கு வகை உண்டு என்பது தெரிந்திருக்கும். அதே போல் வேதத் துக்கான குணங்களும் நான்கு.

நித்யத்வம் : எப்பொழுதும் இருக்கக் கூடியது அழிவே இல்லாதது. இயற்கையாகவே நித்யமானதாய், காலவெள்ளோட்டத்தினாலே பாதிப்பு இல்லாமல் நித்யமாய் இருக்கும் குணம்.

அதற்குத்தான் எழுத்து வடிவு இல்லையே? கம்பன், காளிதாஸன் காவியம் போல் நூல் வடிவாய் இல்லையே என்றால்... பகவானின் மூச்சுக் காற்றாய் இருப்பதே அதற்கு நித்தியத் துவம் தருகிறது. அதற்கும் மேலே என்ன நித்யத்வம் வேண்டும்!

சப்த ப்ரஹ்மமாய்ப் பரமாத்மாவை வேதத்தைப் பார்த்தார்கள் ரிஷிகள்.

இரண்டாவது குணம் அபௌருஷேயத் வம். வித்யாரண்ய சுவாமி எழுதுகிறார் : வேதம் என்றால் என்ன? அத்துடன் சம்பந்தப் பட்டவர் யார்? அதன் பயன் என்ன? என்று கேட்கிறார்.

இஷ்ட பிராப்தி : அநிஷ்ட நிவிருத்தி என் பார்கள். நம் உடல் ஆரோக்கியமாய் இருப் பதே 'இஷ்டம்'. பிராப்தி என்பது அப்படி அது அமையப் பெற்ற வரம். 'அநிஷ்டம்' என்றால் உடலுக்குள் இருக்கும் வியாதி.

வைத்தியர் மருந்து கொடுத்தால் வியாதி போய்விடுகிறது. அப்புறம் தளர்ச்சி வருகிறது. தளர்ச்சியைப் போக்க வேறு மருந்து தருகிறார்! இப்படி சரீரத்துக்கு (உடலுக்கு) ஔஷத சேவணமெல்லாம் (மருத்துவ சிகிச்சை) பண்ணு கிறோம்.

எப்படி மருந்து உற்பத்தி நாள் முடிவு



நாளோடு காட்சி அளிக்கிறதோ அப்படி சரீரத்துக்குக் கூட இரண்டும் எழுதியிருக்கிறது. ஆனால், முடிவு நாள் கண்ணுக்குத் தெரியாததாலே சௌக்யமாக, நிம்மதியாக இருக்கிறோம். சரீரமும் மருந்தும் அழியக்கூடியவை. ஆனால் ஆத்ம ரோகத்துக்கு நிவர்த்தியான வேதமருந்து அழிவற்ற வஸ்து. அது பிறப்பு இறப்பு இல்லாத நிலையை அடைவதற்கான மருந்தைச் சொல்கிறது!

ஆனால் பரமாத்மாவே கூட இயற்றாதது அந்த வேதம். எந்தவொரு புருஷனாலும் இயற்றப்படாதது : அபௌருஷேயத்வம்.

மூன்றாவதுகுணம் : அவிச்சின்னபரம் பராஹதத்வம் – அதாவது ஒருவர் சொல்லி, இன்னொருவர் கேட்டு, வழி வழியே வந்துகொண்டிருக்கும் குணம். சிரமப்பட்டு சொல்லிக் கொடுக்க வேண்டியிருக்கிறது; கற்றுக் கொள்ளவும் சிரமப்பட வேண்டும்.

நான்காவது குணம்: அனந்தத்துவம். வேதம் மொத்தத்தையும் யாரும் கற்றுக் கொண்டு விட முடியாது. வேதங்கள் அனந்தம்!

பரத்வாஜ மஹரிஷி மிக இளமையிலேயே வேதம் கற்க ஆரம்பித்தார். 96 வயசு ஆகி விட்டது. ஆனால் முழுக்க கற்றுக் கொண்டு முடிந்தபாடில்லை. எனவே இந்திரனை நோக்கித் தவமிருந்தார். அவன் அவர் முன் தோன்றி 'என்ன வேண்டும்?' என்று கேட்டான். 'இன்னும் நூறு வயது வரை வாழ ஆயுள் வேண்டும்' என்றார். இந்திரனும் வரமளித்துப் போனான். அந்த ஆயுளும் 96 ஆண்டுகள் முடிந்தது. ஆனாலும் வேதத்தை முழுதும் கற்க முடியவில்லை, பரத்வாஜரால்! மறுபடியும் தபஸ், மறுபடியும் வரம் என்று மூன்று நூறு வருடங்கள் கடந்தன. நான்காவது முறை அவர் மீண்டும் வரம் கேட்டு விடுவாரே என்று அஞ்சி, இந்திரன் அவர் தவத்தைத் தொடங்கும் முன்பே பிரத்யட்சமாகி விட்டான்!

"உமக்கு நான்காவது ஆயுளைக் கொடுத்தால் அதைக் கொண்டு என்ன செய்வதாக இருக்கிறீர்?" என்று பரத்வாஜரைக் கேட்டான் இந்திரன்.

"என்ன கேட்கிறாய் இந்திரா நீ! பிரம்மசர்யம் அனுஷ்டித்து வேதம் பயில்வதைத் தவிர வேறு காரியம் எனக்கு இல்லை..." என்றார்.

உடனே இந்திரன் பூ: புவ: சுவ: என்ற மூன்று மந்திரங்களினாலே மூன்று பர்வதங்களை (மலைகளை) உண்டாக்கினான்.

"இதோ தெரிகின்ற மூன்று மலைகளும் வேதங்கள்" என்றான் பரத்வாஜரை நோக்கி.

பரத்வாஜருக்கு ஒரே சந்தோஷம். தம் மூன்று பிறவிகளில் மூன்று மலைகளான வேதங்களைக் கற்று விட்டதாக நினைத்து, "இந்திரா இது மொத்தமும் எனக்கு வந்து விட்டதா...?" என்றார்.

"உமக்கு வந்ததைக் காட்டட்டுமா...?" என்றான் இந்திரன். ஒவ்வொரு மலையிலிருந்தும் ஒரு பிடி மண்ணை எடுத்துப் போட்டு, "முந்நூறு வருஷ காலத்திலே அத்யயனம் பண்ணினது இந்த மூன்று கைப்பிடி. இன்னும் எத்தனை நூறு வயசு எடுத்தால் இந்த மூன்று மலைகளையும் உம்மாலே கரைக்க முடியும்...?" என்றான்.

நடுங்கிப் போய் விட்டார் பரத்வாஜர்!

'கற்றது கைமண் அளவு' என்கிற வசனம் இப்படி வேதத்தைக் குறித்துச் சொன்ன கதையினாலே வந்ததுதான்!

ஆக, அனந்தத்துவம் – முடிவில்லாத தன்மை என்பது வேதத்தின் இன்னொரு குணம்.

இப்படி நான்கு குணமுடைய நால் வேதங்களை நான்கு கால்களாகக் கொண்டு வராஹமூர்த்தி நிற்கிறான் என்றால் நாம் அவனைக் குறித்து என்ன சொல்ல முடியும்...? 'ஓம் விச்வஸ்மை நம:' என்றுதான் சொல்ல முடியும். அதைச் சொல்லிவிட்டால் பரம சந்தோஷம் அடைவான் வராஹமூர்த்தி!

(தொடரும்)

## எறும்பார் கடிக்கிறார்!

செப்டம்பர் 15ஆம் தேதி அண்ணா பிறந்த நாளுக்குள் ஜெயலலிதா சொத்துக்களைப் பறிமுதல் செய்ய மத்திய, மாநில அரசுகள் நடவடிக்கை எடுக்கத் தவறினால், எம்.ஜி.ஆர் தொண்டர்களே ஜெயலலிதா சொத்துக்களைப் பறிமுதல் செய்வதற்கான நேரடி நடவடிக்கையில் இறங்க வேண்டிய சூழ்நிலை ஏற்படும் என்பதை எச்சரிக்கையாக விடுக்க கடமைப் பட்டிருக்கிறேன்.

– அழகு திருநாவுக்கரசு



**பசு என்பது தாய். தாய்கூட குழந்தைப் பருவத்தில் மட்டும்தான் பாலூட்டுகிறாள். பசுவோ ஒரு மனிதனின் எல்லா பருவத்திலும் பாலூட்டு கிறது. அதனால்தான் பசுவைக் 'கோமாதா' என்று வழிபடுகிறோம்; பொங்கலிட்டுக் கொண்டாடுகிறோம்; இது ஒரு பக்க நடைமுறை தான். மறுபக்கம் என்ன நடக்கிறது? பால் தரும் பசுவுக்குப் பால் காரர்கள் என்ன கொடுக்கிறார்கள்? கலபமாகவும் அதிகமாகவும் பால் கறப்பதற்கு அவர்கள் என்ன செய்கிறார்கள்? சென்னையிலும் சுற்றியுள்ள சில புறநகர்ப் பகுதிகளிலும் சென்று பார்த்தபோது அதிர்ச்சியாக இருந்தது. பசு வதையின் உச் சத்தையே பார்க்க முடிந்தது....**

"உங்க கையில இருக்கற கறவை மாடுங்களுக்கு என்னென்ன தீவனம் கொடுக்கறீங்க?"

"எதுக்குக் கேக்கறீங்க?" என்ற அந்தப் பால்காரர் நம்மை ஏற இறங்கப் பார்த்தார்.

"நானும் ஒரு மாடு வாங்குனங்க. சரியாகவே கறக்க மாட்டேங்குது... அதுக்குத்தான்."

"எவ்ளோ கறக்குது?"

"காத்தால ரெண்டு லிட்டர் கறக்கறதுக்குள்ளேயே என்னப்புடி உன்னைப் புடின்னு ஆயிடுது... சாயங் காலம் அரை லிட்டர் கறந்தாலே பெரும்பாடு..."

"நீங்க என்ன தீவனம் வெக்கறீங்க?"

"என்ன... இந்தப் பருத்திக் கொட்டை, புண்ணாக்கு, தவிடு... இப்படித்தான்...."

"அதான் மொரண்டு புடிக்குது!"

"பின்ன, வேறென்ன குடுக்க லாம்கிறீங்க?"

"'மால்ட்' குடுத் துப் பாருங்க... அப் புறம் தெரியும்... பக்கத்து ஊட்டுக் கும் நீங்களே பால் சப்ளை செய்ய லாம். பாலாக் கொட்டும்..."



"அப்படியா... ஆனா 'மால்ட்' எல்லாம் எக்கச்சக்க வெலையா இருக்குமே. அதுக்கு வெளியிலே பாலை வெலை குடுத்து வாங்கிக்கலாமே!"

"இப்படி வாங்க... பக்கத்துல வாங்க... 'மால்ட்'டுன்னா கொழந்தைங்களுக்கு வாங்கிக் குடுக்கற மாதிரின்னு நெனச்சிட்டீங்களா. அதான் இல்லை. இலோ ஒரு ரூவா தான். வழக்கமா கறவைங்களுக்கு ஒரு மாட்டுக்குத் தின மும் முப்பத்தஞ்சு அல்லது நாற்பது ரூபா செலவா குன்னா, 'மால்ட்' போட ஆரம்பிச்சா தினம் பத்து ரூபாய்ல முடிஞ்சிடும்.... தெரியுமில்ல...?"

"இவ்வளவு சீப்பா 'மால்ட்' கெடைக்குதா?"

"இன்னும் பக்கத்தில வாங்க... நான் சொல்ற 'மால்ட்' என்ன தெரியுமா? டிஸ்டிலரீஸ் இருக்கு தெரியுமில்ல... சாராய ஆலைன்னு சொல்றாங்களே அதாங்க... அங்க வர்ற கழிவுப் பொருள்தான் 'மால்ட்'. நல்ல வாசனையா

# மயக்கத்தில் கறக்கும் மாடுகள்! ஒரு மாபெரும் கொடுமை!

இருக்கும். கறவைங்களும் விரும்பிச் சாப்பிடும். ஒரு தடவை குடுத்துப் பழக்கிட்டீங்க, மறு தடவை அது இல்லாம மாடே தவிச்சுப் போயிடும்..."

"அப்படியா சொல்றீங்க?"

"தோ... பாருங்களேன்...."

கொஞ்சம் போல் கையில் எடுத்துக் கொண்டு வந்து காண்பித்தார். அசல் சாராய வாசனை. ரவையில் புழுக்கள் நெளிவது மாதிரி அதிலும் புழுக்கள்!

"கறவை மாடு இதையா சாப்பிடுதுங்கிறீங்க?"

"பின்ன... உங்க மாட்டுக்கு வெச்சிப் பாருங்க. அஞ்சாறு லிட்டருக்கு கொறவில்லாம கறக்கும்."

"அப்ப பால் கறக்கறதே ஒரு வேலையாகும்கறீங்க..."

"அதான் கெடையாது. ஊசி போடுங்க. மடில கை வெச்சாலே பாலு கொட்டிடாதா?"

"ஊசியா? கருத்தரிக்கறதுக்குத்தானே ஊசி போடுவாங்க. இதுக்குக் கூடவா போடுவாங்க?"

"சுத்த வெவரம் புரியாத ஆளா இருக்கீங்களே, நீங்க மெய்யாலுமே கறவை வெச்சிருக்கீங்களா?"

"சத்தியமா!"

"அப்பப் போட்டுப் பாருங்க..."

"ஊசி போடறதுக்கு வேற, டாக்டரைத் தேடி அலையணுமே?"

"இந்தத் தமாஷ் தானே வேணாங்கறது..."

"மெய்யாலுமே தெரியாமதாங்க கேக்கறேன்."

"மாடு கன்னுப் போடறதுக்குச் சிரமப்பட்டா போடுவாங்களே ஒரு ஊசி... ஆக்ஸிடோசின்... அதாங்க. அத்தப் போட்டவுடனே பாலு கப்புனு சொரந்திடும்!"

"அந்த ஊசியை நாமே போடலாமா? ஏதாவது மாட்டுக்கு ஏடாகூடமா ஆயிடாதா?"

"கவலையே வேணாம். எல்லா மாட்டுக்காரனும் போட்டுக் கறக்கறதுதான். காத்தாலயும் போடறோம். சாயங்காலமும் போடறோம்."

"அந்த ஊசி மருந்தெல்லாம் நமக்குக் கெடைக்குமா?"

"கெடக்காம என்ன. உங்களுக்கு எத்தனை வேணும்? டப்பா டப்பாவா வாங்கித் தரேன். மாட்டுத் தீவனம் விக்கற எல்லாக் கடைங்கள்லயும் கெடைக்குது..."

"வெல ஜாஸ்தியா இருக்குமே!"

"அதுவும் கெடையாது. தோ பாருங்க... நூறு டோஸ் கொண்ட டப்பா. முப்பத்தஞ்சு ரூபாதான். உங்க பக்கம் இருக்கிற தீவனக் கடையிலயே தாராளமா கெடைக்கும்!"

"இந்த ஊசி மருந்தெல்லாம் தடை பண்ணின மருந்துன்னு சொல்லுவாங்களே. ஒரு மாட்டுக்காக நான் வாங்கப் போயி, போலீசு கேசுன்னு ஏதாவது தொந்தரவாயிடுச்சுன்னா என்ன பண்றது?"

"ஒரு தொந்தரவும் கெடையாது. மாடு வெச்சிப் பால் கறக்கற எல்லாரும் வாங்கிப் போட்டுக்கிட்டுத் தான் இருக்காங்க. இது எல்லாருக்கும் தெரியத்தான் தெரியும். எல்லாம் ஒரு

● புகழ் பெற்ற பூரி ஜகன்னாதருக்குப் பண நெருக்கடி. கோவிலின் வருவாய்க்கும், செலவுக்கும் ஒரு கோடி ரூபாய் அளவுக்குத் துண்டு விழுந்திருக்கிறது. இதற்கு மூலகாரணம் என்ன? கோவிலுக்கு வருமானத்துக்கு வழி செய்து கொண்டிருந்த எண்பதாயிரம் ஏக்கர் நிலத்தை, அரசாங்கம் எடுத்துக் கொண்டு விட்டது. நஷ்ட ஈடு பற்றிப் பேச்சே இல்லை. கையைப் பிசைந்து கொண்டிருக் கிறது, கோவிலை நிர்வகிக்கிற குழு!

● தமிழ் நாட்டின் நெற் கஞ்சியம் என்று தஞ்சாவூரைத் தானே குறிப்பிடுவார்கள்? அந்தப் பெருமையை, இப்போது செங்கை எம்.ஜி.ஆர் மாவட்டம் தட்டிக் கொண்டு போய்விட்டது! தஞ்சை - நாகை மாவட்டங்கள் பிரிக்கப் பட்டதுதான் காரணம். 1995 - 96ல் மாநிலத்தின் மொத்த நெல் உற்பத்தியில் ஆறில் ஒரு பங்கு, செங்கையில் விளைந்துள்ளது என்பது குறிப்பிடத்தக்கது. கொசுறாக ஒரு தகவல். ஏரி மாவட்டம் எனப்படும் செங்கை யில் மொத்தம் எத்தனை ஏரிகள் தெரியுமா? 3688!

• ஜூஹி சாவ்லா



● நெம்பர் டூ... இல்லை நெம்பர் ஒன் என்றெல்லாம் கூறப்பட்ட இந்தி ஸ்டார் ஜூஹி சாவ்லாவுக்கு இப்போது கையிலிருப்பது

நீக்குப் போக்குத்தான். கவலையே படாதீங்க. நான் சொன்ன மாதிரி 'மால்ட்'டு குடுங்க. ஊசியும் போடுங்க. அப்புறம் ஜமாய்ங்க...!"

**நா**ம் பல பால்காரர்களிடமும் பேசிப் பார்த்த போது கிடைத்த தகவல்கள்தான் மேலே சொல்லப் பட்டவை.

'மால்ட்' என்று சொல்லப்படுகிற - சாராய ஆலைகளின் கழிவுப் பொருளான அதை மாடுகள் சாப்பிடுகிறபோது, மாடுகளும் லேசான போதை மயக்கத்துக்கு ஆட்படுவதால், சாப்பிட்டுப் பழகிய மாடுகள், பிறகு அது இல்லாமல் இருக்க முடியாது என்கிற நிலைகூட ஏற்பட்டு விடுகிறதாம். அதோடு அதைச் சாப்பிடும் மாடுகள் அதிக அளவு பால் கறக்கிறது என்பதும் பல பால்காரர்கள் அனுபவ பூர்வமாகக் கண்ட உண்மை. அதோடு இன்னொரு உண்மையையும் அவர்கள் ஒப்புக் கொள்ளத்தான் செய்கிறார்கள்.

அதாவது, 'மால்ட்' சாப்பிடும் மாடுகளுக்கு டயோரியா மாதிரி அடிக்கடி வந்து விடுகிறதாம். அப்புறம் பல மாடுகள் இரண்டு மூன்று பருவத்துக்கு மேல் கருத்தரிப்பதும் இல்லையாம். காரணம் 'மால்ட்'தான் என்பதையும் அவர்களே ஒப்புக் கொள்கிறார்கள். ஆனாலும் தொடர்ந்து கொடுப் பதற்குக் காரணம், அதிகமான பால் கறக்க முடி கிறது என்பதுதான்!

**அ**டுத்து ஆக்ஸிடோசின் (OXYTOCIN) என்கிற ஊசி விஷயம். சாதாரணமாக இந்த ஊசி யைப் பிரசவத்தில் (மனிதர்களுக்கும் தான்) சிரமம் ஏற்படுகிறபோது டாக்டர்கள் போடுகிறார்கள். இந்த ஊசி போடப்பட்டதும் கருப்பை அதிக அளவில் சுருங்கி விரிய ஆரம்பிக்கும். அப்போது கருப்பைக் குள்ளிருக்கும் கரு சுலபமாக வெளியே வந்து விடும்.

இப்படிப்பட்ட ஊசியைப் பால்காரர்கள் சுலப மாகப் பால் கறப்பதற்காகப் போடுகிறார்கள். இந்த ஊசியைப் போட்ட சில வினாடிகளிலேயே மடியில் பால் சுரந்து விடுகிறது. கை வைத்ததுமே பாத்திரத் தில் பால் கொட்டி விடுகிறது. இதனால் மாடுகளுக் குப் பக்க விளைவுகள் ஏற்படுமே என்கிற கவலை யெல்லாம் யாருக்குமே இடையாது.

இத்தனைக்கும் இந்த ஊசி மருந்து தடை செய்யப்பட்ட மருந்துகளில் ஒன்று. ஆனாலும் ஒவ்வொரு பால்காரர் வீட்டிலும் நூற்றுக்கணக்கில் வாங்கி வைத்திருக்கிறார்கள். மாட்டுத் தீவனம் விற் கப்படுகிற கடைகளிலெல்லாம் டப்பா டப்பாவாக அடுக்கி வைத்திருக்கிறார்கள்.

ஒரு சி.சி.கொண்ட ஆக்ஸிடோசின் விலை சாதாரணமாக மூன்று ரூபாயிலிருந்து ஐந்து ரூபாய் வரையாகும் என்கிற சூழ்நிலையில், வெறும் முப் பத்தைந்து பைசா விலையில் எப்படி விற்கப்படு கிறது? அப்படியானால் அதன் தரம் என்ன? இதைத் தயாரிக்கும் ஹிப்லா லெபாரடரீஸ் (KHAGAUL - 801 105 - நிஜ முகவரிதானா?) என்கிற கம்பெனிக்கு

மாத்திரம் இது எப்படி சாத்தியம்? இப்படியிருந்தும் 'ட்ரக் கண்ட்ரோல் போர்டு' எப்படிக் கண்டு கொள்ளாமல் இருக்கிறது என்பதெல்லாம் புரியாத புதிர்!

எனவே, சாம்பிளுக்குக் கொஞ்சம் 'மால்ட்'டையும் ஒரு டோஸ் ஆக்ஸிடோசின் ஊசி மருந்தையும் வாங்கிக் கொண்டு SPCA வுக்குச் சென்றோம். விஷயத்தை விளக்கினோம்.

"இதெல்லாம் ஒரு 'நெட்வொர்க்'காகவே நடந்து கொண்டிருப்பதால் எங்களால் ஒன்றுமே செய்ய இயலவில்லை. ஆக்ஸிடோசின் ஊசி மருந்தைப் பொருத்தவரை ட்ரக் கண்ட்ரோல் போர்டுதான் நடவடிக்கை எடுக்க வேண்டும்!" என்றார் உதவி மானேஜர் எஸ். இராமலிங்கம்.

"மால்ட் சாப்பிடுவதாலும் தினசரி இரண்டு முறை ஊசி போடப்படுவதாலும் மாடுகளுக்குக் கெடுதல் ஏற்படாதா?" - SPCA வின் டாக்டர் பி.எஸ்.வி. இராஜேந்திரனிடம் கேட்டோம்.

"மால்ட் என்று சொல்லப்படுகிற இந்தக் கழிவுப் பொருளில் நிச்சயம் சத்துப் பொருள்கள் இருக்கத் தான் செய்யும். அதனால்தான் இதைச் சாப்பிடும் மாடுகள் அதிகப் பால் கொடுக்கின்றன என்று நினைக்கிறேன். அதோடு அதில் நச்சுத்தன்மை ஏதேனும் இருந்தால் அது பாலிலும் கலந்து வரவே வாய்ப்புகள் உண்டு. ஆக்ஸிடோசின் ஊசி மருந்தில் உள்ள நச்சுத் தன்மையும் பாலில் கலக்கத்தான் செய்யும். அதுவும் இத்தனை மலிவான மருந்து என்றால் அதில் வேறு என்னென்ன கலப்படமோ தெரியவில்லை. நிச்சயம் மாடுகளுக்குக் கெடுதல் தான் என்றாலும் அது எந்த அளவுக்குக் கெடுதல் என்பதைப் பரிசோதித்துப் பார்க்காமல் சொல்ல முடியாது. எனக்கு ஒருவாரம் அவகாசம் கொடுங்கள். நான் விலங்கியல் கல்லூரியிலோ அல்லது வேறு எங்காவதுள்ள பரிசோதனைக்கூடத்திலோ கொடுத்து, இவை இரண்டையும் பரிசோதனை செய்து விளக்கமாகச் சொல்கிறேன்!" என்று வாங்கி பத்திரப்படுத்திக் கொண்டார் டாக்டர் இராஜேந்திரன்.

பரிசோதனை முடிவுகளுக்காக நாம் வேண்டுமானால் ஒரு வார காலம் காத்திருக்கலாமே தவிர, அரசாங்கம் காத்திருக்கக் கூடாது. உடனடியாக ட்ரக் கண்ட்ரோல் போர்டை முடுக்கிவிட்டு இந்த ஆக்ஸிடோசின் ஊசி மருந்துகளையெல்லாம் கைப்பற்ற வேண்டும். சம்பந்தப்பட்டவர்களின் மேல் நடவடிக்கை எடுக்க வேண்டும்.

ஏனெனில் இது மாடுகளுக்குச் செய்யப்படுகிற மிகப் பெரிய சித்தரவதை மட்டுமல்ல; இப்படிப்பட்ட மாடுகளிலிருந்து கறக்கப்படும் பாலைக் குடிக்கும் குழந்தைகளுக்கும் மற்றவர்களுக்கும் கண்ணுக்குத் தெரியாமல் எத்தனை கெடுதல்களை உண்டாக்கப் போகிறதோ யார் கண்டது?

— **இளங்கோவன்**

ஒரே ஒரு படம்தான். அமிதாபின் கம்பெனி தயாரிக்கும், சிறைச் சாலை புகழ் பிரியதர்ஷன்தான் டைரக்ஷன். ஒரே ஒரு படத்தில் தான் ஒரு பிரபல நட்சத்திரம் நடிக்கிறார் என்பதைக் காட்டிலும் அதை அவர் வெளிப்படையாய் ஒப்புக் கொண்டிருக்கிறார் என்பதுதான் அதிசயம்!

● ராமகிருஷ்ண ஹெக்டே, பழசையெல்லாம் மறந்து, புதிய கட்சியை ஸ்திரப் படுத்துவதில் மும்முரமாய் இருக்கிறார். ஆனால், அவரை வெளியேற்றிய ஜனதா தளக்கட்சியின் தலைவரான லல்லுபிரசாத் யாதவ், இன்னும் அவரை விலக்கியது பற்றிப் பேசுவதை நிறுத்தக் காணோம். அவரது சமீபத்திய கமெண்ட்: "ஹெக்டே எப்போதுமே கட்சியின் அறிவு ஜீவிகளின் குழுவில் இருந்தவர். எனக்கு அறிவு ஜீவிகளைக் கண்டால் பிடிக்காது."



• ஹெக்டே

● சென்னை நகர கூடுதல் போலீஸ் கமிஷனரான ரவி ஆறுமுகம், இஞ்சினியரிங் பட்டதாரி மட்டுமல்ல, சட்டமும் படித்தவர்! தற்போது, மதுரை பல்கலைக் கழகத்தில் தீண்டாமை குறித்து டாக்டர் பட்டத்துக்காக ஆராய்ச்சி செய்து வருகிறார்.

தொகுப்பு : **கௌதம்**

பாரதி பாஸ்கர்

# திக்குத் தெரியாத காட்டில்...

பெரியவர் நடேசன் காந்தி மண்டபத்தில் நுழையும்போதே அவர்கள் இருவரையும் பார்த்து விட்டார். நாலைந்து நாட்களாகவே தினமும் பார்த்து வருகிறார். அவனுக்கு இருபது வயதுக்கு மேல் இருக்காது. பருக்கள் நிரம்பிய முகம், சிகரெட் பிடித்துக் கறுத்துப் போன உதடுகள், கட்டம் போட்ட கர்சீப்பை எடுத்து அடிக்கடி வியர்வையைத் துடைத்துக் கொண்டிருந்தான். அனாவசியமாக அவள் மேல் கை போட்டுக் கொண்டிருந்தான் - அவள் மேல் அவனுக்கிருந்த உரிமையை நாலு பேர் பார்க்கட்டுமே என்பது போல்.

அவள் சின்னப் பூப்போல இருந்தாள். ரோஸ் தாவணியும், வெள்ளைச் சட்டையும் செங்கல் நிற பள்ளிச் சீருடையுமாக. அழகான மருண்ட கண்கள். ஏராள மான முடி. கோவிலில் வைத்து 'பாலா' என்று சொல்லி பிரதிஷ்டை செய்யலாம் போல்.

இதுபோன்ற ஜோடிகளைப் பார்ப்பது ஒன்றும் நடேசனுக்குப் புதிதில்லை. முதன்முதலில் இங்கே வர ஆரம்பித்தபோது இதைப் பார்த்துக் கொஞ்சம் அதிர்ந்துதான் போனார்.

காந்தி மண்டபத்தில் புதர் தவறாமல் உட்கார்ந்திருந்த ஜோடிகள் எல்லாம் சின்னஞ்சிறு பெண்களும் விடலைப் பையன்களும். இதுகள் முத்தம் பரிமாறிக் கொள்வதும் தொட்டுக் கொள்வதும் இன்னமும் உள்ளே புதர் மண்டிய இடங்களுக்குப் போய் மறைவாக இருக்க நோட்டுக்கள் கைமாறுவதும், மண்டபத்தின் உள்ளேயே வந்து, 'நல்ல வசதி சார். டீசென்ட் ப்ளேஸ். ரெய்ட் தொந்தரவே கிடையாது. வீடு மாதிரி சார்' என்று விற்கும் லாட்ஜ் தரகர்களும்... எல்லாம் அவருக்குப் பழகி விட்டது. இந்த நாட்டுக்கே சாபக்கேடு என்று அவர் நினைப்பார். கண்டும் காணாததுமாய் போகும் கலையை அவரும் இப்போதெல்லாம் பயின்று விட்ட போதிலும் இந்தப் பெண்ணைப் பார்த்தவுடன் அவர் மனசெல்லாம் பதறுகிறது. வீட்டில் இருக்கும் பேத்தி சாருவின் நினைவு வருகிறது.

அவளை விட இதற்கு மூன்று அல்லது நாலு வயசு அதிகமாயிருக்கலாம். பள்ளிக்குப் போகாமல் - ஆனால் வீட்டில் பள்ளிக்குப் போவதாய்ச் சொல்லிவிட்டு வந்திருக்கிறாள். நினைக்க நினைக்க அவருக்குக் கோபம் தலைக்கேறி விடுவிடென்று அவர்கள் பக்கத்தில் போனார்.

"என்னப்பா இது? பப்ளிக் பிளேசில விரசம்? ஏய் பொண்ணு, ஸ்கூலுக்குப் போகாம இங்க என்ன பண்ணறே?" என்றார் அதட்டலாக. கேட்டவுடன் இருவரும் கூசித் தவிப்பார்கள். நல்லபடியாக புத்தி சொல்லி அனுப்ப வேண்டும் என்று திட்டம் தீட்டியிருந்த அவரின் எண்ணத்தில் மண் விழுவது போல் அந்தப் பையன் ஆக்ரோஷமாக எழுந்து, "ஏய் பெரிசு, வீட்ல சொல்லிட்டு வந்திட்டியா? உன் வேலையைப் பார்த்துகிட்டு போகலைன்னா வாய் வெத்தலை பாக்கு போட்டுக்கும்!" என்றான்.

குரலில் நூறு சதம் அவமரியாதை, அலட்சியம், வெறுப்பு, யாருக்கும் அஞ்சாத தடித்தனம் தெரிந்தது. பேச்சைக் கேட்டுக் கொண்டிருந்த இரண்டு மூன்று ஜோடிகள் சிரிக்க, அவமானத்தால் மனம் நொந்து திரும்பினார் நடேசன்.

"நாம பொண்ணுங்க கூட இருந்தா, நம்ப வயசுப் பசங்களை விட இந்தக் கிழங்களுக்குத்தான்யா ரொம்பப் பொறாமை" என்று பின்னால் குரல் கேட்டது. கனத்த மனத்துடன் வீடு பார்க்க நடந்தார்.

அவருக்கு திடீரென்று தன் பேத்தியை சினிமாவுக்கு அழைத்துச் சென்ற சம்பவம் நினைவுக்கு வந்தது. பிரபல நட்சத்திரம் நடித்த படம். சாரு முதல் நாளே போய்த்தீர வேண்டும் என்றாள்.

மகன் அரவிந்தனின் ஆடிட்டர், சினிமா நட்சத்திரத்திற்கும் ஆடிட்டராய் இருந்ததால் எளிதில் டிக்கெட் கிடைத்தது. துணைக்கு யாருமில்லை என்பதால் அவரே புறப்பட்டார். கூட்டம் நெரியும் என்று அவர் எதிர்பார்த் திருந்தாலும், முதல் காட்சியில் நட்சத்திரம் தோன்றியவுடன் கையில் கற்பூரத்துடன் ஆரத்தி காட்டிய வெறிக் கூட்டத்தைப் பார்த்து மலைத்துப் போய் விட்டார். இன்டெர்வெல்லில் தலைவலி என்று காப்பி சாப்பிட பேத்தியோடு வெளியே வந்தபோதுதான் அது நடந்தது. இவர் பார்த்துக் கொண்டிருக்கையிலேயே படத்தின் ஹீரோ, கதாநாயகியை அடிக்கடி செய்வது போல, சாருவின் பின்பக்கத்தில் தட்டினான், டிக்கெட் வாங்கும் முயற்சியில் சட்டை கிழிந்திருந்த ஒரு இளைஞன். தாத்தாவிடம் சொல்லக் கூட கூசியபடி அவமானத்தினாலும்



கோபத்தினாலும் முகம் சிவக்க, கண்ணில் வழியும் நீரை அடக்கப் போராடினாள் பேத்தி. ரவுடித்தனத்தை அகலத் திரையில் பயிற்றுவிக்கிற ஹீரோக்கள்... அவர் நெஞ்சு எரிந்தது.

அன்று போலவே இப்போதும் அவருக்கு நெஞ்சு எரிகிறது. அவர்கள் இருவரின் கிட்டத்தில் சில வினாடிகள் நின்று பேசிய போது, அந்தப் பெண்ணின் நோட்டைப் பார்த்தாரே, அதை ஞாபகப்படுத்திக் கொண்டார். வி.வனிதா, பதினோராம் வகுப்பு, புஷ்பம் பள்ளி..

நகரின் இன்னொரு கோடியில் புறநகர்ப் பகுதியில் இருந்தது அந்தப் பள்ளி. அதனால்தானே இத்தனை தூரம் தாண்டி இங்கே தள்ளிக் கொண்டு வந்திருக்கிறான், அந்தப் பையன்? பள்ளியில் அதே சீருடையில் இருந்த ஒரு பெண்கள் கூட்டத்தை அணுகி, "வி. வனிதா, பதினோராம் வகுப்பு, சிகப்பா, ஒல்லியா இருப்பாளே, அந்தப் பொண்ணு வீடு யாருக்காவது தெரியுமாம்மா? நான் உறவு. விலாசம் தொலைச்சிட்டேன்" என்றார்.

அவர்கள் ஏழெட்டுப் பேரை கலந்து பேசி, வீட்டு அடையாளம் சொன்னார்கள். போய்க் கதவைத் தட்டும் போது கூட நடேசனுக்கு




ரொம்ப பயமாக இருந்தது. ஏதாவது அவமானப்பட்டு வீட்டுக்கு விஷயம் தெரிந்தால்... அரவிந்த் எப்படிக் கத்துவான்? மருமகள் இளக்காரமாகச் சிரித்து 'இப்படிக் கூட செய்வார்களா? எங்க ஃபேமிலியில் இபபடி எல்லாம் நடக்காதுப்பா' என்பாளே – என்றெல்லாம் யோசித்தார். எதற்கு இந்த விலாசத்தைத் தேடிப் பிடித்தார்? என்ன செய்யப் போகிறார்? வனிதாவை அடித்து இடித்து, ரசாபாசம் ஆகிவிட்டால்... யோசனை முடிவதற்குள் கதவு திறந்தது.

திறந்தது ஒரு நடுத்தர வயதுப் பெண்மணி. தோற்றத்தில் வறுமையும் முகத்தில் அனுபவமும் தெரிந்தது. கூப்பிய கைகளுடன் நடேசன் பேசினார்.

"இந்த வீட்டுப் பொண்ணு வனிதா...."

"ஆமா என் பொண்ணுதான், ஏதாவது ஆக்ஸிடென்டா?" அவள் பதறினாள்.

"இல்லேம்மா. இல்லை. உங்க பொண்ணைப் பத்தி நான் கொஞ்சம் பேசணும்..."

கதவைத் திறக்கலாமா, வேண்டாமா என்ற தயக்கம் அந்தப் பெண்ணின் முகத்தில் தெரிந்தது.

"அடையாறு பக்கத்தில இருந்து ஒன்னரை மணி நேரம் பயணம் பண்ணி கஷ்டப்பட்டு வந்திருக்கேன். என்னை நீங்க நம்பலாம்" என்றார்.

"அதெல்லாம் இல்லை. உள்ளே வாங்க" என்று கதவைத் திறந்தாள். வீட்டில் மாட்டியிருந்த புகைப்படத்தைப் பார்த்து உறுதிப்படுத்திக் கொண்டு ஒரு தம்ளர் நீர் அருந்திவிட்டு எல்லாம் சொன்னார்.

"மனசு கேக்கலம்மா எனக்கு. கிட்டத்தட்ட என் பேத்தி வயசுதான் நம்ப பொண்ணுக்கு! அந்தப் பையன் முகமே சரியில்லைம்மா. வெறும் பொறுக்கி. வனிதாவுக்கு ரெண்டுங்கெட்டான் வயசு. இப்ப வர்ற பாட்டும் சினிமாவும் நல்லாவா இருக்கு? பொம்பளங்களை கலாட்டா செய்யற பொறுக்கிதான் பாதி படத்தில ஹீரோவா வரான். நம்ப பொண்ணு இந்த வயசிலே சென்சிடிவ்வா இருப்பா. அவன் ரெண்டு வார்த்தை சொன்னவுடனேயே சொக்கிப் போயிருப்பா. நாமதா மெள்ளப் பேசி அவ மனசை மாத்தணும்."

"அடிப்பாவி, பணம்தான் இல்லை. மானமாச்சும் மிஞ்சிச்சுன்னு நினைச்சேனே" என்று அலறத் தொடங்கிய வனிதாவின் தாயை 'உஷ்' என்று அடக்கினார் நடேசன்.

"இதப் பாருங்கம்மா, இங்க வந்து செய்தியைச் சொல்றதுக்கே நான் ரொம்ப யோசிச்சேன். வீட்ல மொரட்டு ஆண் பிள்ளைகள் இருந்து, கலாட்டா செய்து விஷயத்தைப் பெரிசாக்கி, நாலு பேருக்குத் தெரிஞ்சு பெரிய ரசாபாசம் ஆயிடுமோன்னு.

உலகிலே மிகப் பெரிய மசூதி இஸ்லாமாபாத்திலுள்ள ஷா பைசல் மசூதிதான். சுமார் 18 ஹெக்டேர் பரப்பில் அமைந்துள்ள இந்த மசூதியில் ஒரே சமயத்தில் ஒரு லட்சம் பேர் தொழுகை நடத்த முடியும். மேலும் இரண்டு லட்சம் பேர் மசூதியைச் சுற்றியுள்ள தாழ்வாரங்களில் தொழுகை நடத்தும் வசதியுண்டாம்.

ஆதாரம் : விஸ்டம்
தகவல் : நெ. இராமன்



நல்லவேளை நீங்க இருக்கீங்க. பொறுப்பா செய்யுங்க."

வனிதாவின் தாய் கொஞ்சம் யோசித்தாள்.

"வெளியிலே தெரிஞ்சா வனிதாவுக்கு ஸ்கூல்ல டீ.சி. கொடுத்திடுவாங்க. எல்லாமே கெட்டுரும். போன வருஷம் இவர் திடீர்னு இறந்திட்டாருங்க. வனிதாவுக்கு மேலே ஒரு அக்கா. கீழே இரண்டு தம்பிங்க. பெரிய பொண்ணை ஒரு எக்ஸ்போர்ட் கம்பெனிக்கு அனுப்பறேன். மாமனார் கொஞ்சம் பணஉதவி செய்யறார். பத்தாம, வீட்ல மெஷின் போட்டிருக்கேன். ராணி மாதிரி இருந்தோமே, நம்ம நிலைமை இப்படி ஆயிடுச்சேன்னு நான் புலம்பிக்கிட்டு இருந்ததிலே, வனிதா பாதை மாறிப் போறதை கவனிக்கலைங்க. இப்ப நீங்க சொன்னதும் கவனம் வருது. இரண்டு மாசமாவே ரொம்ப அலங்காரம். புதுத் துணி வேணும்னு நச்சரிப்பு. நேரம் கழிச்சு வீட்டுக்கு வரது எல்லாம் நடக்குது. ஆனா வனிதா, வீட்டுக் கஷ்டம் தெரிஞ்ச பொண்ணு. நான் அழுது பேசி சரிசெய்யறேன். சொல்லாம கொள்ளாம வீட்டை மாத்தறேன். வனிதாவோ அப்பா வேலை செஞ்ச நிர்வாகமே தாம்பரத்திலே ஒரு ஸ்கூல் நடத்தறாங்க. இந்த வருஷம் இப்பத்தான் தொடங்கியிருக்கு. அவங்க கால்ல விழுந்தாவது பிள்ளைங்களை அங்க சேத்திடறேன்."

"வரேம்மா" என்று கிளம்பியவர், வனிதாவின் தாய் கால்களில் விழவும், பதறிப் போனார். 'என்னம்மா இது? விடும்மா' என்றார்.

"எனக்கென்னான்னு நீங்க பாட்டுக்குப் போயிருந்தா ஆண்துணை இல்லாத குடும்பமே நசிஞ்சு போயிருக்கும். ரொம்ப நன்றிங்க."

அந்தப் பையன் தொடர்ந்து நாலைந்து நாள் தினமும் காந்தி மண்டபம் வந்து காத்திருந்து ஏமாற்றத்துடன் திரும்புவது நடந்தது. வனிதாவின் தாய் ஃபோன் செய்தாள். சுருக்கமாய், "எல்லாம் நல்லபடியாய் முடிஞ்சது ஐயா. முள்ளில விழுந்த எங்க வீட்டு சேலையை சேதமில்லாமல் எடுத்தாச்சு" என்றாள். தாம்பரம் வீட்டின் முகவரி கொடுத்தாள்.

அன்று அவர் காந்தி மண்டபத்திலிருந்து வீட்டைப் பார்க்க நடக்க ஆரம்பிக்கையில் பின்னால் குரல்கள் கேட்டன.

"இதே பார்ட்டிதாண்டா சேகர்! இதுவா உங்களாண்டை வந்து ரப்சர் பண்ணிச்சுன்னு சொல்றே? இதேதான் அன்னிக்கு வனிதா வீட்லேர்ந்து வெளியே வந்திச்சு. நான் பார்த்தேனே. இதுதான் ஏதோ சில்மிஷம் செஞ்சு அவங்களோட அம்மாவை உஷார் பண்ணியிருக்கு. இப்ப அவங்க எங்க போனாங்கன்னே தெரியலை."

"நல்லா மசிஞ்சு வந்தாடா. கெடுத்தான் கிழவன். விடக்கூடாது."

'டேய்' என்ற சேகரின் வெறிக் கூச்சலைக் கேட்டபடியே நடேசன் ஓடத்துவங்கியும், வெகு சீக்கிரம் மாட்டிக் கொண்டார்.

கீழே விழுந்தபோது மண்டை மோதிய சத்தம் அவருக்கே கேட்டது. ஆளரவமற்ற பாதையில் அரை மயக்கத்தில் கிடந்தார்.

விழித்தபோது இன்னும் தெருவில் கிடப்பதை உணர்ந்தார். பின்மண்டை பயங்கரமாக வலித்தது. எத்தனை வெறி? எத்தனை ஆக்ரோஷம்? எத்தனை வன்மம்? இந்தத் தலை முறைக்கு ஏன் சரியான வழிகாட்டும் நபர்கள் அமையாமல் போய் விட்டார்கள்?

சேகரின் செயலில் அவருக்கு வருத்த மில்லை. இப்படியொரு பொறுக்கியாக அவன் மாற யார் அல்லது எது காரணம்? யோசிக்க ஆரம்பித்தார்.

நடேசனுக்கு சேகர் மற்றும் இயேட்டரில் அவர் பேத்தியின் மேல் இடித்தவன் போன்றோர்களின் மீது ரொம்பப் பரிதாபமாக இருந்தது. அடி வாங்கினபோது கூட வராத கண்ணீர் இப்போது வர, மெதுவாக எழுந்து நடக்க ஆரம்பித்தார்.



• டாக்டர் வெங்கடசுப்ரமணியன்



ஒருமுறை வைத்தீஸ்வரன் கோவிலுக்கு அவரும் சோனியாவும் செல்ல, கூடவே சென்ற நான் அவர்களுக்கு பல்வேறு சந்நிதிகளையும், அவற்றின் சிறப்புக்களையும் விளக்கினேன். ஆவலுடன் கேட்டுக் கொண்டார்கள். அந்தக் கோவிலின் தலவிருட்சத்தைப் பற்றி நான் குறிப்பிட்டபோது, ராஜீவ்காந்தி கூறிய பதில் இன்னமும் என் காதுகளில் ஒலிக்கிறது.

"மனிதர்கள் மரங்களை மதிக்கவேண்டும் என்பதற்காகத்தான் இப்படியெல்லாம் நம் முன்னோர்கள் செயல்பட்டிருக்க வேண்டும். சுற்றுப்புறச் சூழலைப் பாதுகாப்பது என்ற கருத்து நம் நாட்டில் கோயில்கள் நிறுவப்பட்ட காலத்திலேயே இருந்திருக்கிறது!"

# ராஜீவ்காந்தியிடமிருந்து இரண்டு கடிதங்கள்...



ராஜீவ் காந்தி அவர்களுடன் நெருங்கிப் பழகும் பெரும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. அவரது தென்னக விஜயங்களில் பலமுறை நானும் அவருடன் கலந்து கொண்டிருக்கிறேன். கல்பாக்கம் அணுசக்தி ஆராய்ச்சி நிலையத்தைத் துவக்க வருகை தந்திருந்த அவர், அது முடிந்து டெல்லிக்கு சென்றவுடன் இந்தக் கடிதத்தை எனக்கு எழுதினார்.

அணுவின் பிரயோகம் பற்றி உலக நாடுகள் ஜெனிவாவில் கூடி கூடிப் பேசிவரும் இந்தக் காலக்கட்டத்தில், ராஜீவின் இந்தக் கடிதம் மேலும் அர்த்தம் பொதிந்ததாகிறது.

எப்போதுமே சுற்றுப்புறச் சூழல் பற்றி ராஜீவ் காந்திக்கு விழிப்புணர்வு உண்டு.

# வி.ஐ.பிக்கு வந்த கடிதங்கள்

## டாக்டர் கி. வெங்கடசுப்ரமணியன்

புதுடெல்லி,
ஆகஸ்ட் 22, 1988

அன்புள்ள டாக்டர் சுப்ரமணியன்,
ஆகஸ்ட் 6-ஆம் தேதியிட்ட உங்கள் கடிதம் கிடைத்தது. நன்றி. தமிழ்நாட்டு மக்கள் எனக்கு அளித்த பரிவான வரவேற்பு என்னை மனம் குளிர வைத்ததோடு, எனக்கு பெரும் சக்தியையும் அளிக்கிறது.

உங்கள் அன்புள்ள,
ராஜீவ்காந்தி.

புதுடெல்லி,
ஜனவரி 5, 1986

அன்புள்ள டாக்டர் சுப்ரமணியன்,
டிசம்பர் 24 தேதியிட்ட உங்கள் கடிதம் கிடைத்தது. நன்றி. சென்னை விழாவில் அணுஆயுத சோதனை உலை ஆராய்ச்சி மையத்தை தேசத்துக்காக அர்ப்பணம் செய்தது மகிழ்ச்சிகரமான ஒரு விஷயம். வன்முறை, அழிவு இவற்றுக்காக அணுஆயுத சக்தியைப் பயன்படுத்துவதை விட, அதை ஆக்கபூர்வமான பயன்களுக்கேற்ப உருவாக்குவதும் உபயோகப்படுத்துவதும்தான் அதிகக் கடினமான மற்றும் சவாலான (அதே சமயம் விரும்பத்தக்க) ஒன்றாக இருக்கும்.

புதிய கல்விக் கொள்கையை உருவாக்க நாங்கள் எடுத்துக் கொள்ளும் முயற்சிகளைப் பற்றி, கல்வியாளர் என்ற முறையில் நீங்கள் கூறியுள்ள கருத்துக்களை வரவேற்கிறேன்.

உங்கள் அன்புள்ள,
ராஜீவ் காந்தி.

'அணுசக்தி என்பது அமைதிக்காகவே' என்று ஆழமாக நம்பியவர் ராஜீவ். மின்உற்பத்தி, ரயில்வே, ஆகாய விமானங்கள், வேகமான தொலைபேசி இயக்கம் இப்படிப் பலவிதங்களில் அணுசக்தியை இயங்க வைக்கலாம். இதை விடுத்து நாடுகளையும், அவற்றிலுள்ள மனிதர்களையும் நாசமாக்க அணுசக்தியைப் பயன்படுத்துவது என்பது தவறு. இந்தியாவுக்கு மட்டுமல்ல; உலகுக்கே இது பொருந்தும் என்பதால் எல்லா நாடுகளுமே அணு ஆயுதங்களை ஒழித்துக்கட்ட வேண்டும் என்ற இந்தியாவின் தற்போதைய நிலைக்கு ஆதரவளிப்பதாகவே இந்தக் கடிதம் இருப்பதாக நான் எண்ணுகிறேன்.

மற்றொரு கடிதத்தில் தமிழக மக்கள் தனக்களித்த உற்சாக வரவேற்பில் பரவசப்பட்டதை அவர் குறிப்பிட்டிருக்கிறார். ஆனால் பின்னாளில் விதி செய்த சதியால் இதே தமிழக மண்ணில் அவர் கொலை செய்யப்பட்டதை அறியநேர்ந்த போது நிலைகுலைந்து போனேன்

## மனசுல இருந்தது; கொட்டிட்டேன்!

\- 'எக்ஸ்நோரா' எம்.பி. நிர்மல்



# வீட்டை வாங்கிப் பார்!

இந்தத் தொடர் பகுதியில் பெரும்பாலோர் குறைகளையே 'கொட்டி' வந்தார்கள். குறையையே தாம் நிறையாக்கிய அனுவத்தைப் பகிர்ந்து கொள்கிறார் எம்.பி. நிர்மல்!

"எங்கள் சொந்த ஊர் சென்னையை அடுத்துள்ள குன்றத்தூர். என் தாத்தா காலத்தில் மிகவும் வசதியாக வாழ்ந்தோம். வீட்டில் நூற்றுக்கும் மேற்பட்ட மாடுகள். நிறைய பஸ்களுக்கும் சொந்தக்காரராய் இருந்தார் தாத்தர்! கிராமத்தின் சலவை மற்றும் முடிதிருத்தும் தொழிலாளிகளுக்கு நிலம் தானம் கொடுக்குமளவுக்கு வசதியாக வாழ்ந்தோம் என்றால் பார்த்துக் கொள்ளுங்கள். ஆனால், செய்த தொழிலில் நஷ்டம் ஏற்பட்டதால், சொத்துக்களை விற்க வேண்டிய நிலை ஏற்பட்டது. ஃபீஸ் கட்டி நல்ல பள்ளியில் படித்துக் கொண்டிருந்த நான், ஆறாவது வகுப்பிலிருந்து அரசுப் பள்ளியில் படிக்க வேண்டியதாயிற்று.

எப்படியோ பள்ளி, கல்லூரிப் படிப்பை முடித்துவிட்டு, ஐ.ஓ.பி.யில் வேலைக்குச் சேர்ந்தேன். 125 ரூபாய் சம்பளம். வேலைக்குச் சென்று கொண்டே மாலை நேரக் கல்லூரியில் படிப்பைத் தொடர்ந்தேன். ஏராளமான வீடுகளுக்குச் சொந்தக்காரர்களாக இருந்த நாங்கள் பல வாடகை வீடுகளில் இருக்க வேண்டிய சூழ்நிலை. எப்படியாவது சொந்த வீடு வாங்கி விட வேண்டும் அல்லது கட்டிவிட வேண்டும் என்ற வெறி என்னுள் வளர்ந்து கொண்டே வந்தது.

அப்போதுதான், நண்பர் ஒருவர் தேனாம்பேட்டை அருகே, ஒரியப்பா சாலையில், நடிகை எம். சரோஜாவுக்குச் சொந்தமான வீடு ஒன்று விற்பனைக்கு உள்ளது என்று சொன்னார். நானும் என் சித்தப்பாவும் சென்று அந்த வீட்டைப் பார்த்தோம்.

அந்தத் தெருவுக்குள் நுழைந்தவுடன் மூச்சைப் பிடித்துக் கொண்டார் சித்தப்பா. தெருவெங்கும் சாக்கடை. இரண்டு பக்கமும் அசிங்கம். 'என்னடா இந்தத் தெருவில் வீடு பார்த்திருக்கே?' என்று முனகினார். வீட்டிற்கு இரண்டு பக்கமும் குடிசைப் பகுதி. வீட்டு காம்பவுண்டுக்குள்ளேயே நுழைய முடியாத அளவுக்கு கேட் அருகிலேயே ஏராளமான குழந்தைகள், 'டாய்லெட்' போய்க் கொண்டிருந்தார்கள். ஒருவாறு தாண்டி கதவைத்

## ஜாலி போட்டி - 1
## -முடிவு-

"படிக்கிற காலத்துல அந்த அமைச்சர் கிளாஸுக்கே போக மாட்டாரு"

"இப்ப என்ன அதுக்கு?"

"இப்ப ஜெயில்ல ஸ்பெஷல் கிளாஸ் வேணும்னு அடம் பிடிக்கறாரு"

-கோவைபுதூர் கே.அனிதா

நமக்கு அனுப்பியிருந்த இந்த ஜோக்கை ஐந்து பகுதிகளாக வெட்டி, 4.8.96 இதழில் ஆங்காங்கே ஒளித்து வைத்து, தேடி எடுக்கச் சொல்லி, போட்டி வைத்திருந்தோம்.

ஆயிரக்கணக்கானவர்கள் மிகச் சரியாகக் கண்டுபிடித்து, எழுதி அசத்தி விட்டார்கள்!

வேறு வழியின்றி, குலுக்கலில் ஓர் அதிர்ஷ்டசாலியைத் தேர்ந்தெடுக்க வேண்டியதாயிற்று.

ரூ.5000/- பரிசு பெறுகிறவர்

**ஆர்.நடராஜன்**

எஸ்பி.6, 4-வது குறுக்குத் தெரு,

கே.கே.நகர்,

சென்னை - 600 078.

கங்கிராட்ஸ், நடராஜன்!

கலந்து கொண்டு சிறப்பித்த அத்தனை வாசகர்களுக்கும் நன்றி! (அடுத்த வாட்டி நீங்கதாங்க ஜெயிக்கப் போறீங்க!)

-ஆசிரியர்

திறந்து உள்ளே போனால், வீட்டின் பின் பக்கம் பெரியவர்கள் டாய்லட்டாக இருந்தது!

"டேய் இந்த வீடு வேண்டவே வேண்டாம். இடத்தைக் காலி பண்ணு" என்றார் சித்தப்பா. ஆறு வருடகாலமாக வாடகைக்கு விடக்கூட லாயக்கில்லாமல் காலியாகக் கிடந்தது அது. எனக்கு வங்கி கொடுக்கும் கடனில் வாங்கக் கூடியதாக இருந்த அந்த வீட்டை விடுவதற்கு எனக்கு மனதில்லை. மேலும் அண்ணா சாலைக்கு அருகில் இருந்தது. அந்த நிலையில், இரண்டு முடிவுகள்தான் எடுக்க முடியும். ஒன்று அந்த வீட்டை வாங்காமல் இருப்பது; வேறு வழியில்லை என்றால், வாங்கிவிட்டு, 'எல்லாம் தலைவிதி' என்று அதே சூழலிலேயே வாழப் பழகிக் கொள்வது!

ஆனால் எதையுமே லேசில் விட்டுக் கொடுக்காத நான், 'இந்தச் சூழ்நிலையையே மாற்றி விட்டால் என்ன' என்று யோசிக்கத் துவங்கினேன்.

என் குடும்பத்தினரின் ஒட்டுமொத்த எதிர்ப்பையும் மீறி, வீட்டை வாங்கி விட்டேன். மாலை நேரமானால் வாசலில் 'குடி மகன்கள்' சோடா பாட்டிலுடன் மோதிக் கொள்வார்கள். குறி தவறும் பாட்டில்கள், ஜன்னல் கண்ணாடிகளை உடைக்கும். நான் வீட்டை வாங்கியபோது, குடிசைவாசிகள் மாடியில் துணி காயப்போட வருவார்கள். 'நாங்க வீட்டை வாங்கி விட்டோம்' என்று சொன்னாலும், 'நாங்க எவ்வளவோ வருஷமா துணி காயப்போடறோம்' என்று எங்கள் எதிர்ப்பை அலட்சியமாக ஒதுக்குவார்கள். என் மனைவி, அவள் சொந்தக்காரர்களுக்குக் கூட வீட்டு முகவரியைக் கொடுக்க யோசிப்பாள். 'அவர்கள் வந்து பார்த்துவிட்டு, இவ்வளவு மோசமான ஏரியாவிலா இருக்கீங்க!' என்று மட்டம் தட்டக் கூடாதல்லவா!

ஒருவாறு மிகவும் கஷ்டப்பட்டு அங்கே இருக்கப் பழகிக் கொண்டோம். அந்தக் குடிசைவாசிகளுடன் ஒரு நெருக்கத்தை ஏற்படுத்திக் கொள்ளவே கொஞ்ச காலம் பிடித்தது.

அதன் பின் சுத்தம், சுகாதாரம், சுற்றுப்புறச் சூழல் என்ற கசப்பு மருந்துகளை வாழைப் பழத்தில் வைத்துக் கொடுப்பது போல் போதித்தேன்.

கிட்டத்தட்ட அந்தக் காலகட்டத்தில் நகரின் வேறு பகுதிகளில் 'எக்ஸ்நோரா'வைத் துவக்கிக் கொண்டிருந்தோம். கிரியப்பா தெருவில் பொதுக் கழிப்பிடம், தடையற்ற கழிவு நீர்ப் பாதை, மரம் நடுவது, போன் றவற்றைச் செயல்படுத்த மாநகராட்சி அதிகாரிகள் மிகவும் உதவினார்கள்.

இப்போது நான் இருப்பது அதே வீடு தான். இன்னமும் குடிசைப் பகுதிகள் இருக் கத்தான் செய்கின்றன. ஆனால், மற்ற தெருவாசிகள் பொறாமைப்படும் அளவுக்கு சாலை சுத்தமாக இருக்கிறது. இருபக்கமும் தோட்டங்கள். மாலை நேரப் பள்ளி, ஆஸ் பத்திரி என்று வளர்ச்சிகள் வேறு. என்னு டைய ஸ்லைட் புரொஜக்டரில் (Slide Projector) 'இந்த வீடும் சுற்றுப்புறமும் முன்பு எப்படி இருந்தது' என்று நண்பர்களுக்குப் போட்டுக் காண்பிக்கும்போது 'பெரிய ஆளப்பா' என்று ஆளாளுக்கு பாராட்டு கிறார்கள். இது தனி ஆளால் முடிகிற காரியமா! மக்கள் ஒத்துழைப்போடுதான் சாத்தியமாயிற்று! நான் விரும்புவதெல்லாம் இதுதான்! எல்லா மக்களுக்கும் இந்த உணர்வு வர வேண்டும். சுற்றுப்புறத்தை சுத்தமாக வைத்துக் கொள்ள வேண்டும் என்கிற உணர்வு!

சந்திப்பு : ப்ரியன்

படம் : பேஜர் கே. மூர்த்தி

# ஜாலி போட்டி – 4

## பரிசு ரூ.5000/-

### தலைவர்களைத் தெரிகிறதா?





















அருகிலுள்ள கார்ட்டூன்களைப் பாருங்கள். பத்துப் பேரும் பிரபலமான அரசியல்வாதிகள். யார் யார் என்று கண்டு பிடிக்க முடிகிறதா? கண்டுபிடித்து, கூப் பனில் வரிசைப்படுத்தி எழுதி, 2.9.96க்குள் அனுப்பி வையுங்கள். சரியாக வரிசைப் படுத்தும் ஒருவருக்குப் பரிசு ரூ.5000/- பலர் சரியாகச் செய்தால், குலுக்கலில் ஒருவர் தேர்ந்தெடுக்கப்படுவார். ஆசிரியர் தீர்ப்பே இறுதி.

**ஜாலி போட்டி - 4**

கார்ட்டூன் முகங்கள்:

1
2
3
4
5
6
7
8
9
10

பெயர்: ..............................................

முகவரி: ..............................................

..............................................

# காவிரிக் கரையில் கால் ஏக்கர் நிலம், முதலீட்டாளர்களுக்கு காய்கறி இலவசம்



## தொடர்ந்து 7 ஆண்டுகளுக்கு
## ஒவ்வொரு 7 நாட்களுக்கு ஒருமுறை
## உங்களுக்கு 7 கிலோ காய்கறி தர

## வருகிறான்

# காய்கறிகாரன்

- விலைவாசி ஏற்றத்தின் பாதிப்பின்றி நீங்கள் விரும்பும் 7கிலோ காய்கறிகள் உங்கள் இல்லம் தேடி இலவசமாக வருகிறது, அல்லது விவசாய வருமானமாக ஆண்டுக்கு ரூ. 3000/- முன் தேதியிட்ட காசோலையாக வழங்கப்படும்.
- கால் ஏக்கர் நிலத்தை 7 வருடங்களுக்குப்பிறகு வீட்டுமனைகளாக நல்ல விலைக்கு விற்கலாம்.
- முதலீட்டிற்கு சிறந்த வருமானம் - வருமான வரி விலக்கு உண்டு.

## முதலீட்டுத் திட்ட விவரம்

| திட்டம் 'A' சுலப தவணைத்திட்டம் | திட்டம் 'B' குறுகிய தவணைத்திட்டம் | திட்டம் 'C' * ஒரே தவணைத்திட்டம் |
|---|---|---|
| முன்பணம் ரூ. 3,500/- | முன்பணம் ரூ. 11,800 | ஒரே தவணை |
| மாதத் தவணை ரூ. 2,675/- | மாதத்தவணை ரூ. 11,000 | ரூ. 32,900/- |
| மாதங்கள் 12 | மாதங்கள் 2 | |

* B மற்றும் C திட்டத்தில் சேருபவர்களுக்கு உடனடியாக காய்கறி வழங்கப்படும். பதிவுக் கட்டணமாக ரூ. 2,500/- கூடுதலாக செலுத்த வேண்டும்.




## B K எஸ்டேட்ஸ்

109, நுங்கம்பாக்கம் நெடுஞ்சாலை
நுங்கம்பாக்கம், சென்னை 600 034
தொ.பேசி 8266978, 8277234
பேக்ஸ் : 91-044-8282792

கிளை : A-3, S V V காம்ப்ளக்ஸ், 9,சாஸ்திரி சாலை,
தில்லை நகர், திருச்சி - 620 017. போன் : 33076.




### சிறப்பு பரிசு!

ஆகஸ்ட் 1 முதல் 31 தேதிக்குள் எங்கள் B&C திட்டங்களில் சேரும் முதல் 100 நபர்களுக்கு ரூ.1400/- மதிப்புள்ள காபி மேக்கர் அன்பளிப்பாக தரப்படும்.

JEGI/BKE/3296

**இந்த ஜனதா தளக்கட்சியின் எம்.பிக்கு எழுதப் படிக்கத் தெரியாது.**




# எழுதப் படிக்கத் தெரியாத ஓர் எம்.பி!

பகவதி தேவி. கதர் புடைவையில் டெல்லியில் வலம் வந்து கொண்டிருக்கும் எளிமையான எம்.பி. கயா தொகுதியிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள இந்த ஜனதா தளக்கட்சியின் எம்.பிக்கு எழுதப் படிக்கத் தெரியாது. ஹரிஜன இனத்திலேயே மிகவும் பிற்படுத்தப்பட்ட பிரிவைச் சேர்ந்தவர். தம் தொகுதியின் முக்கிய சாலைகளில் செல்லும்போது, ஒரு நிமிடம் நிற்கிறார். மறுகணம் அவரது மனம், பழைய நினைவுகளில் மூழ்கி விடுகிறது. கண்களில் ஆனந்தக் கண்ணீர். காரணம், அந்த ரோடுகளைப் போட்டதில் அவருக்கும் பங்குண்டு.

ஏழைக் குடும்பத்தைச் சேர்ந்த பகவதி தேவி கல்லுடைக்கும் தொழிலாளியாக வாழ்க்கையைத் துவங்கியவர். எட்டு வயதில் திருமணம்! கணவர் பிஜய் தாஸ், கல் உடைக்கும் தொழிலாளி. கணவனும் மனைவியும் கல்லுடைத்து, சம்பாதித்து எளிய வாழ்க்கை நடத்திக் கொண்டிருந்தபோதுதான் அந்தத் திருப்பம் நிகழ்ந்தது.

சோஷலிஸ்ட் தலைவர் ராம் மனோகர் லோகியா பேசிய ஒரு கூட்டத்துக்குப் போனார்கள் கணவனும் மனைவியும். லோகியாவின் பேச்சு, அவர்களை மிகவும் ஈர்த்துவிட்டது. மீட்டிங் முடிந்தவுடன், அவரைச் சந்தித்துப் பேசினார்கள். அது முதல் சோஷலிஸ்ட் கட்சியில் இணைந்து, அதன் அனைத்துப் போராட்டங்களிலும் கலந்து கொள்ள ஆரம்பித்தனர்.

ஜெயிலுக்குப் போவது என்பது அவர்களுக்கு வாடிக்கையாகி விட்டது. ஒரு முறை பகவதி தேவி கைதாகி, சிறையில் அடைக்கப்பட்டபோது, அவருக்குக் குழந்தை பிறந்து, வெறும் இருபது நாட்களே ஆகியிருந்தன என்பது குறிப்பிடத்தக்கது.

படிப்படியாகக் கட்சியில் முக்கியத்துவம் பெற்றார் பகவதி தேவி. கயா தொகுதியில் போட்டியிட, கட்சி டிக்கெட் கொடுத்தபோது, தைரியமாய் முன் வந்தார். தேர்தலில் தோல்வியைச் சந்தித்தார். அடுத்த முறையும் தோல்விதான்.

பீகார் சட்டசபைத் தேர்தலில் போட்டியிட்டபோது வெற்றி பெற்றார். மூன்று முறை எம்.எல்.ஏ பதவி வகித்திருக்கிறார்.

கணவர் இறந்த பின் தம் நான்கு குழந்தைகளையும் காப்பாற்றும் பொறுப்பு பகவதி தேவிக்கு வந்து சேர்ந்தது. அவரது இனத்து மக்கள் நினைத்தும் பார்க்காத காரியத்தை பகவதி தேவி செய்தார். தம் பையனையும் பெண்ணையும் பள்ளிக்கூடத்துக்கு அனுப்பினார்!

"என் தொகுதி மக்களின் தேவைகள் ஏராளம். எம்.பி. என்ற முறையில் அவற்றை நிறைவேற்றுவது என் கடமை. என் கடமைகளை நிறைவேற்றி விடுவேன் என்ற நம்பிக்கை எனக்கு இருக்கிறது" என்று பகவதி தேவி சொல்லும்போது அவரது கண்களில் தன்னம்பிக்கை ஒளிர்கிறது.

— எஸ். சந்திரமௌலி

நன்றி : தி வீக்

